# குமரகுருபரன்




மலர் 15]  1964-௵ ஆவணி-௴ 1௳  16-8-64  [இதழ் 8

தனிப் பிரதி 13 நயா பைசா  வருடச் சந்தா ரூ. 1½

## ஆசிரியர் குழு



## உள்ளுறை

பக்கம்

உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை





| மலர் 15 | குரோதி-ஆ ஆவணித் திங்கள் 1-ம்வ [16-8-64] | இதழ் 8 |
|---|---|---|


# தில்லைச் சிவகாமியம்மை யிரட்டைமணிமாலை

(கட்டுரை 4)


தொண்டைமண்டலாதீனம் மகாசந்நிதானம்
சீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் அவர்கள்
ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் மடாலயம்,
காஞ்சிபுரம்.


சென்ற கட்டுரைக்கண் சேர்க்கற்பாலது இப்பகுதி. அதைச் சேர்த்துக் கொள்ளல் 'குமரகுருபரன்' வாசர்க்கு நன்றாகும். இம்மாலையின் பதினாறுவது பாடலும் மதுரைக் கலம்பகத்தில்,

"செல்லிட்ட பொழின்மதுரைத் தேவர்மணந்
தடாதகா தேவிந் கன்று
சொல்லிட்ட குறமகள்யான் தும்மலும்நல்
வரத்தேகாண் சுளகில் அம்மை

நெல்லிட்ட குறிக்குநீ நினைந்ததொரு
பொருளதுநித் திலக்கச் சார்க்கும்
வல்லிட்ட குறியிநெடும் வளையிட்ட
குறியுளதோர் வடிவு தானே."

என்ற பாடலும் குறத்தில் 'கைக்குறியின் முகக்குறி..................
மேவுவாயே' என்ற பாடலும், காசிக்கலம்பகத்தில்,

"அழகு துயில்குங் குமக்கோங்கை யணங்கே எங்கள் அருட்காசிக்
குழகர் மகற்கு மகட்கொடுத்த குடியிற் பிறந்த குறமகள்யான்
ஒழுகு தொடிக்கைக் குறியுமுகக் குறியும் தரும்ஒள் வளைக்குறியும்
புழுகு முழுகு முலைக்குறியும் உடையார் அவர்பொற்புயந்தானே."

என்ற பாடலும் முற்கட்டுரைக்கண் 'தழும்பு' என்றது குறித்து, ஆசிரியர் குமரகுருபரமுனிவரர் மிகவும் நயம் உற வெவ்வேறிடத்திற் கூறியிருத்தலை அறிய நிற்பன. கச்சார்க்கும்வல்-கொங்கைக்கு அடையடுத்தவுவமையாகு பெயர் ஆயிற்று.

"ஒருவல்லி; அல்லிக் கமலத்துள் ஊறுபைந் தேறல்ஒத்த
திருவல்லி; தில்லைச் சிவகாம வல்லி;என் சித்தத்துள்ளே
வருவல்லி; செம்பொன் வடமேரு வில்லியை வாட்கணம்பாற்
பொருவல்லி பூத்தலின் அன்றேஇப் பூமியைப் பூவென்பதே(௬)."

இப்பாடலில் மூன்றே சில்லறையடி அம்மையின் சிறப்பும், மிச்சம் 'பூ' எனப் பூமிக்குப் பெயர் உண்டானதன் காரணமும் கூறிய வாறும்.

அம்மையை 'வல்லி' 'வல்லி' எனப் பன்முறை சொற்பொருட்பின் வருநிலையணி அமையப் பாடிய அழகு யாவரும் அறிதற்கியல்வதே. வல்லி என்பது 'லாத' என்னும் வடசொல்லின் பொருளது. 'ஹேமலதா' என்பதைத் தமிழிற் 'பொற்கொடி' என்பதுண்டு. 'புத்தமுதோ அருள் தழையத் தழைத்ததோர் பொற்கொடியோ' என அங்கயற்கண்ணியம்மை பிள்ளைத் தமிழில் (3) வருதல் காண்க. வல்லியும் வடசொற்றிரிபே. 'சிவகாமவல்லி' வல்லிதேவசேனு' என்பவற்றுல் அது வெளிப்படும்.

"வார்கொண் டணந்தமுலை மலைவல்லி கர்ப்பூர
வல்லி அபிராம வல்லி
மாணிக்கவல்லி மரகதவல்லி அபிடேக
வல்லி''

எனப் அப்பிள்ளைத் தமிழ் விநாயகர் காப்பிற் பாடியதும் அவ்வுண்மையை விளக்கும்.

'வல்லி' என்னுஞ் சொல்லினைப் பல்லிடத்தும் புல்லிய இப் பாடலைப் போல, அதன் பொருட்டாகிய'கொடி' என்னும் தமிழ் மொழியினையும் அவ்வாறு அமையப் பாடியருளினர் ஆசிரியர். அதே பிள்ளைத் தமிழிலே, நீராடற் பருவத்தில் அதைநோக்கி மகிழ்ந்து வாசகரே! நீராடலாம்; பாடலாம்.

"சொற்கொடி யோடு மலர்க்கொடி கொய்து
தொடுத்த விரைத் தொடையும்
சுந்தரி தீட்டிய சிந்துர மும்மிரு
துங்கக் கொங்கைகளின்
விற்கொடி கோட்டிய குங்கும முங்குடை
வெள்ளம் கொள்ளை கொள
வெளியே கண்டுநின் வடிவழ கையன்
விழிக்கு விருந்து செய
இற்கொடி யோடு கயற்கொடி வீரன்
எடுத்த கருப்பு விலும்
இந்திர தனுவும் வணங்க வணங்கும்
இணைப்புரு வக் கொடி சேர்
பொற்கொடி யிமய மடக் கொடி வைகைப்
புதுநீ ராடுகவே
பொருநைத் துறையொடு குமரித் துறையவள்
புதுநீ ராடுகவே"

என்னும் இனிய செய்யுளைப் பிள்ளைத் தமிழ்பாடும் பெரியவோதுவார்கள், தக்க சமயத்திற் பாடி மக்களை மகிழ்விப்பது நல்லது. அக்கொடியைப் பற்ற விரும்புவார்க்கு அவை எட்டு கொடியே அன்றி எட்டுக் கொடியுமாம்.

செம்பொன் வடமேரு வில்லியைக் கண்ணுகிய அம்பாலே போர் செய்யும் வல்லி என்ருர் இதிலே; அதிலே அம்புலிப் பருவத்திலே பத்து முறை 'ஆணிப்பொன் வில்லி புணர் மாணிக்க வல்லி' என்ருர். சிவகாமவல்லி சிவாநந்தவல்லி இரண்டும

ஒன்றே. சிவனுக்குக் காமத்தை விளக்கும் வல்லி எனக்கொள்ளும் பொருள் உலகியலை யொட்டியதாகும். உணர்வியலை யொட்டிப் பொருள் கொள்ளார் மூன்னோர். 'சிவகாமவல்லி' என்னும் இடத்தில் 'தன்னனுந்தக் கொடி' என்னும் தொடர் அமைத்து, அவ்வுயரிய பொருளை உணர்த்தியருளினர் பரஞ்சோதி மாமுனிவர். காமம், இன்பம், ஆநந்தம் என்பவை முதலிய சொற்கள் ஒரு பொருளனவாதல் வெளிப்படை. காமத்துப்பாலை இன்பத்துப்பால் என்னும் வழக்கும் அறிக. ஆநந்தம் சிவாநந்தம் நித்யாநந்தம் பேரின்பம் என்னும் உண்மையும் பலர் அறிந்ததே.

"உண்மையறி வானந்த வுருவாகி யெவ்வுயிர்க்கும் உயிராய் நீரின் தண்மையனல் வெம்மையெனத் தனையகலா திருந்து சரா சரங்கள் ஈன்ற பெண்மையுரு வாகிய தன் னுனந்தக்கொடி மகிழ்ச்சி பெருக யார்க்கும் அண்மையதாய் அம்பலத்துள் ஆடியருள் பேரொளியை அகத்துள்வைப்பாம்." என்னுந் திருவிளையாடற் புராண வாழ்த்துச் செய்யுளில், நடராசப் பெருமானை 'அம்பலத்துள் ஆடியருள் பேரொளி' என்றும், அதனையே இரண்டாவதடியிலும் மூன்ருவதடியிலும் முறையே 'தனை' என்றும் 'தன்' என்றும் (படர்க்கைப் பொதுப் பெயர்த்திரிபால்) உணர்த்தினுர் அவ்வாசிரியர். 'தன்னுனந்தக் கொடி' என்பதில், 'தன்' என்றதை அப்படர்க்கைப் பொதுப் பெயர்த் திரிபாகக் கொள்ளாமல், 'தத்' என்னும் வடசொற்றிரிபாகக் கொண்டு 'சிவம்' என்னும் பொருளைக் குறித்ததெனக் கூறலும் உண்டு. அப்பொருளில், 'தன்னுனந்தக் கொடி' என்னும் தொடர் 'சிவகாமவல்லி' 'சிவாநந்தவல்லி' எனக் கொள்ளலாவதை முன்னேர்கள் சொன்னுர்கள். இங்கே, "யார்க்கும் அண்மையது" என்றதையும் திருநாவுக்கரசர் திருவாக்கில் 'இந்தமாநிலத்தே' எனவந்ததையும் ஒருங்கு வைத்துணர்ந்து கொள்ளுதல் பேரின்பம் பயப்பதாகும். 'நள்ளிருளில் நட்டம் பயின்ருடும் நாதன்' என்பது கேவலாவத்தை நிகழ்ச்சியிலும் உள்ளவாற்றைக் குறிப்பது. அஃது அகத்தே பிண்டத்திலும் புறத்தே அண்டத்திலும் ஆடும் திருக்கூத்து இரண்டனுள் ஒன்றே ஆயினும், இப்பிண்டத்தில் நிகழும் கேவலம் சகலம் சுத்தம் என்னும் அவத்தை மூன்றனுள்ளும் ஆடும் ஆட்டத்துள் கேவலாவத்தையில் நடத்தும் நட்டத்தையே

அத் திருவாசகம் உணர்த்திற்று. சிவம் அநாதியாகவே உயிர்களின் பொருட்டுச் செய்யும் அருளுதவி மூவகைப்படும். அவை இலயம், போகம், அதிகாரம் என்பன. அம் மூன்றும் அச்சிவத்தின் அவஸ்தா பேதம். அவை அச்சிவனுல் கொள்ளப்படுவன. அவற்றுள் முதலவத்தையாகிய இலயமும் சூக்குமவிலயம் தூலவிலயம் (சூக்ஷ்மலயம் ஸ்தூலலயம்) என்று இருவகைத்து. "இருவகைமாயைகளிலும் இருவகைப் பிரபஞ்சமும் ஒடுங்கியவழி ஒன்றனைக் குறிக்குமாறு இன்றி அனைத்தினையும் பொதுமையில் நோக்கி நிற்கும் பரமசிவன் அவ்வவத்தை ஒன்றும் கொள்ளாத முடிவு நிலையினன். அன்னுன், ஒடுங்கிய அவ்விருவகைப் பிரபஞ்சமும் மீளத்தோன்றுமாறு குறித்து, ஞானசத்தி மாத்திரத்தால் நோக்கி நின்ற அவசரம் சூக்குமலயம் ஆகும். ஆதலால், இலயசிவம் என்ற பெயர் பரமசிவனுக்கு உண்டாயிற்று. அதன்பின், சூக்குமமான இச்சை, ஞானம், கிரியை என்னும் மூன்று சக்திகளோடு கூடி விந்துவிற் பதிந்து, தூலபஞ்ச கிருத்தியத்திற்கு ஏது ஆன சூக்கும பஞ்சகிருத்தியம் செய்து நிற்கும் அவசரம் தூலலயம்.

சூக்குமலயத்திற் பரநாதம் பரவிந்து என்றும் தூலலயத்தில் அபரநாதம் அபரவிந்து என்றும் சிவத்திற்கும் சத்திக்கும் நாமபேதம் உண்டாகும். இவை நிட்களம்.

சூக்கும இச்சை. ஞானம், கிரியைகளால் சூக்கும ஐந்தொழில் செய்து நிற்பது கேவலாவத்தையில் ஆகும். அதைத் தான் 'நள்ளிருளில் நட்டம் பயின்றுடும்' நாதன் என்றருளினுர் மாணிக்கவாசகப் பிரானுர். அவ்விடம் உயிர்க்கு அண்மையாய் இருப்பன காரண கேவலம், காரிய கேவலம் இரண்டும் ஆகும். ஆகவே, 'யார்க்கும் அண்மையதாய் அம்பலத்துள் ஆடியருள் பேரொளி' என்று பரஞ்சோதி மாமுனிவர் திருவாய் மலர்ந்தருளினுர். 'பேரொளி' என்றது அபரநாத சிவத்தை. முத்தியில் முத்திபெற்ற உயிர்க்கு அநுக்கிரக தாண்டவம் புரியும் பரமசிவத்தைக் குறிக்கும் இடமும் உண்டு. அதுவேறு. அதைச் சேக்கிழார் சுவாமிகள், "சிற்பர வியோமம் ஆகுந் திருச்சிற்றம்பலத்துள் நின்று பொற்புடன் நடஞ்செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி" என்றருளியதால் உணரலாம். திருநாவுக்கரசு

சுவாமிகள் "மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே" என்றதில் அண்மைச் சுட்டு சூக்குமாதிகாரம் பற்றியது. அதுவும் நேரே அன்று. அது சுத்தப்ரபஞ்சங்களைச் சந்நிதி மாத்திரத்தில் தோற்றுவித்துத் தொழில் செய்து நின்ற அவசரம். 'மனித்தப் பிறவி'என்றது, அசுத்தப்ரபஞ்சத் தோற்றத்தது. அத்தோற்றம், அநந்தேசன், ருத்ரன், விஷ்ணு, பி ர ம ன் ஆகியவர்களை அதிட்டித்து நின்று மோகினி மான் இரண்டில் நின்றும் சுத்தா சுத்தப்ரபஞ்சமும் அசுத்தப்ரபஞ்சமும் தோற்றுவித்துத் தொழில் செய்யும் தூல அவசரத்தில் நிகழ்வது. (மனிதப் பிறவி) அதுவும் உயிர்க்கு அணியதே. 'யார்க்கும் அண்மையது' 'இந்தமா நிலத்தே' என்றுசொன்ன அண்மைக்கு இவ்வவசரமே பொதுவில் உரியது. படைப்பு முதலியவற்றில் பரமசிவத்தின் நிலை வேறு. பாட்டைக் குறித்து இங்கு எழுதியவற்றைப் பிறழவுணராமல், தெளிவாக உள்ளவாறு உணர்வார்க்கே இது புலனாகும். இவற்றை உயிர்மேல் வைத்து விளக்கும் கேவலம், சகலம் சுத்தம் என்னும் அவத்தை வேறுபாட்டால் உணர்வதும் பொருந்தும். அப்போது சிவ நிலையையும் ஒருங்குற்றுணர்வது சிறந்தது. பதி, பசு, பாசம் ஆம் முப்பொருளுள் எப்பொருள் குறித்து எவ்வவத்தையில் எவ்வாறு கூறப்படுகிறது என்னும் பகுத்தறிவு இன்றியமையாதது.

வல்லி பூத்தலால் பூ எனப்பட்டது பூமி என்றவாறு. உல கெல்லாம் பூப்பது ஒரு வல்லிதானே, அவ்வல்லி சிவகாம வல்லியே. ஜகதம்பா, லோகமாதா. வீக்குமாறு அரன் உலகிற்கு, வீந்தநாள் மீளப் பூக்குமாறு எவன்? (பாரதம்). ஒரு வல்லி-ஏக நாயகி என்னும் கருத்தினது. புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய்த் தன்னியல்பில் நிற்பது சிவம். புறப்பொருளை நோக்கி நின்றுணர்த்துவது சத்தி. அதைத்தான் 'ஒருவல்லி' என்றார். அல்லிக் கமலம்—அகவிதழ்களையுடைய தாமரை. ஈண்டு இருதய கமலத்தைக் கொள்ள வேண்டும். அக்'கமலத்துள் ஊறுந்தேறல் ஒத்த திருவல்லி'—கருதுவார் இதயத்துக் 'கமலத்து ஊறுந்தேன்' என்ற திருமுறைத் தொடர்ப் பொருளது. சிவனு டைய இச்சா சத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என்னும் மூன்றை யும் கருதிய நிலை இது. இச்சத்தி சமுகம். உயிர்க்குச் சகலத்தில் உலகின்பத்தையும் சுத்தத்தில் வீட்டின்பத்தையும் விளைப்பது.

அதனால் 'தேறல் ஒத்த திருவல்லி' என்றார். 'தில்லைச் சிவகாமவல்லி' என்றது அசுத்தப்ரபஞ்சத்தில் மனிதப் பிறவியுற்ற உயிர்களுக்கு மண்ணுலகில் தில்லையில் மாயா காரிய ரூபத்திலே அருட்டிருமேனியைப் பாவிக்கும்படி நின்று காட்சி தரும் சத்தியை.'என் சித்தத்துள்ளே வருவல்லி' என்றது ஈசாநம் முதலிய பஞ்ச சத்திகளின் நிலையில் அருளும் ஆற்றலைக் குறிப்பது "செம்பொன் வடமேரு வில்லியை வாட்கண் அம்பாற் பொருவல்லி" என்றது மனோன்மணி, மகேசை உமை என்னும் நிலையில், உருவ நிலையில் வைத்து வணங்கப் பெறும் ஆற்றலையறிவிப்பது.

பூத்தல் – உலகைப்படைத்தல். "உலகம்.......மீளப் பூக்குமாறு எவன்?" உயிர்கட்குத் தநுகரணபுவன போகசம்பந்தம் உளதாக்கல். முப்பத்தாறு தத்துவங்களுள் பூமி (நிலம்) யும் ஒன்று. அப்பூமிக்குப் 'பூ' என்னும் பெயரும் உண்டு. அது வட சொல். அதைத் தமிழாக் கொண்டால் (பூ–) மலர் என்னும் பொருளதாகும். பூத்தலால் பூ. மலர்தலால் மலர். அலர்தலால் அலர். பூத்தல் என்றதற்குப் பூத்தற்றொழிலையும் படைத்தற்றொழிலையும் பொருளாக் கொள்ளல் உண்டு. மலர்தல் அலர்தல் முதலியவற்றிற்கு அப்பொருள் அமையாது. பூத்தலின் பூ என்றால், படைத்தலால் பூமி என்றும் பூக்குந் தொழிலால் (மலர்) பூ என்றும் இருபொருள் தோன்றும். அவ்வாறு தோன்றினும் 'இப் பூமியைப் பூ என்பதே' என்றதால், படைத்தலால் பூ(மி) என்பதே இச்செய்யுளில் அமைந்த பொருள். அப்பொருள் கவி சாதுரியத்தால் அமைவதே அன்றி உண்மையால் அன்று. 'பூ' என்பது பூமியை குறிப்பது. வட சொல் வழக்கு. இதைக் காயத்திரி மந்திரப் பொருளறிவினார் அறிவர். அமரகோசம் முதலியன கற்றாரும் அறிவர். அம்மொழியில் அதற்குரிய ஒலி வேறு. தமிழில் மலரைக் குறிக்கும் 'பூ' என்றதன் ஒலி வேறு. ஈரொலியும் தமிழில் ஒரொலியாகவே நிகழும். அந்நிகழ்ச்சியால், ஆசிரியர் இவ்வாறு சாதுரியம்படப் பாடியருளினார். பூத்தலைச் சிவஞானபோத வெண்பா 'வித்துண்டாமூலம் முளைத்தவா தாரகமாம் அத்தன் தாள் நிற்றல்' என்றதன் பொருள் கொண்டு உணர்ந்து கொள்ளலாம். விரிவஞ்சிச் சுருக்கியெழுதப்பட்டது.

(தொடரும்)

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஐந்தாம் தந்திரம் Tantra the Fifth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,
Member. Legislative Assembly,
MADRAS-31.

மலர் 15. இதழ் 7-ன் தொடர்ச்சி

### The goals of the four forms of worship

### சரியை யாதி பாதங்களில் நிற்போர் பெறுவது

29. சார்ந்த மெய்ஞ்ஞானத்தோர் தானவனாயினோர்;
சேர்ந்த எண்யோகத்தர் சித்தர், சமாதியோர்;
ஆய்ந்த கிரியையோர் அருச்சனை தப்பாதோர்;
நேர்ந்த சரியையோர் நீள்நிலத் தோரே.

The Gnanis merge the I in Thou;
The yogis attain Siddhi[1] and Samadhi[2]
Those in kriya miss not the daily worship with flowers;
And they in Sariya perform life long penances here below.

1. Siddhi – miracles.

2 Samadhi – State of quiescence when breath is controlled and thoughts are centered on God.

ஞானிகள் 'தான்' 'அவனு'க இறைவனோடு ஒன்றுவர்; அஷ்டாங்க யோக நெறிநின்றோர் சித்திகளைப்பெற்றுச் சமாதியில் மூழ்குவர்; கிரியை நெறியில் சிறந்தோர் தவறாது இறைவனை மலர் கொண்டு நாளும் அருச்சனை செய்திருப்பர்; சரியை வழி நிற்போர் வாழ்நாள் முழுதும் தவம் செய்து கிடப்பர்.

குறிப்பு வரி 4. சரியையோர் நேர்ந்த நீள் நிலத்தோரே என்று கூட்டவும். நேர்ந்த—தவம் புரிகின்ற.

## The visions of the other Paths are contained in Sariya itself

### ஏனைய பாதங்களின் காட்சிகளும் சரியையில் உள்ளன

30. கிரியை யோகங்கள் கிளர்ஞான பூசை
அரிய சிவனுரு அமரும், அருபம்
தெரியும், பருவத்துத் தேர்ந்திடும் பூசை;
உரியன நேயத்து உயர் பூசையாமே.

Kriya granteth the vision of Siva in Form
Yoga, the Formless One
Gnana granteth the Realisation in fulness of time
But the adoration of the loving heart in Sariya is indeed exalted;
To it belongeth, in truth, the rest of the paths to God.

கிரியை பூசையில் சிவனது சகளமான உருவம் தோன்றும்; யோக பூசையில் உருவமற்ற நிற்குண சிவம் தோன்றும்; ஞான பூசையில் தக்க காலத்தில் முத்தி பிறக்கும். இவையனைத்தும் அன்பினால் இறைவனை வழிபடும் உயர்வுடைய சரியை நெறிக்கு உரியனவாகின்றன.

குறிப்பு: சரியையில் சரியை, சரியையில் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம் – என்ற நான்கின் உண்மை கூறினார்.

## The four Paths were revealed by Nandi

### நான்கு பாதங்களையும் நந்தி உணர்த்தினன்

31. சரியாதி நான்கும், தருஞானம் நான்கும்,
விரிவான வேதாந்த சித்தாந்த மாறும்
பொருளானது நந்தி பொன்னகர் போந்து
மருளாகு மாந்தர் வணங்க வைத்தானே.

The four paths of worship
And the four forms of realisation they give
And the six schools of Vedanta-Siddhanta
-All these are truths
That Nandi from the Golden City descending revealed
For the doubting humanity to be redeemed.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களும், அவை முறையே தருகின்ற அனுப நிலைகளும், அறு வகையாக விரிந்த வேதாந்த சித்தாந்த சமயங்களும் நந்தியெம் பெருமான் கயிலைப் பொன்னகர் இழிந்து, இவ்வுலக மக்கள் உய்யும் வண்ணம் வைத்துப் போன அழியா உண்மைகளாகும்.

குறிப்பு வரி. 2 வேதாந்த சித்தாந்தமாறும் - வேதாந்தம், சித்தாந்தம், பூதாந்தம், போதாந்தம், நாதாந்தம், கலாந்தம் என்பன. "விறிய வேதாந்த முதல் மிக்க கலாந்தவரை" என்னும் தாயுமானவர் வாக்கு நோக்குக.

## The Baptismal rites appropriate for the Four ways of Worship

### அவ்வப் பாதங்களுக்குரிய தீட்சை

32. சமையம் பலசுத்தித் தன்செயல் அற்றிடும்
அமையும் விசேடமும் அரன்மந்திர சுத்தி
சமய நிருவாணம் கலா சுத்தியாகும்
அமைமன்னு ஞானமார்க்கம் அபிடேகமாமே.

Samaya is the baptismal rite for self-surrender in Sariga worship
Visesha, the rite for incantation of Siva Mantra in Kriya;
Nirvana to help Kalas to be revealed in Yoga
And Abhisheka for Grace to be reached in Gnana

சரியை நெறியில் நிற்போருக்கு வேண்டப்படும் தன்செயல் அற்றநிலை சமய தீட்சை என்னும் வலிமை தரும் சடங்கால்

பெறப்படுகிறது; விசேஷ தீட்சை கிரியை நெறியில் புகுவோர்க்கு இறைவனை ஆவாகனம் செய்தற் கேற்ற மந்திர சக்தியைக் கொடுக்கின்றது. யோகிகளுக்கு வேண்டப்படும் கலா விளக்கத்துக்கு உதவுவது நிருவாண தீட்சை; அபிடேக தீட்சை. ஞான மார்க்கத்தில் செல்வாருக்குச் சக்தியின் அருளைப் பெறத் துணை செய்கின்றது.

குறிப்பு : வரி 1. பல சுத்தி – வலிமையைத்தரும் தீட்சை
சுத்தி - தீட்சை, சம்பிரதாயம்
வரி 4. அமை – அம்மை அல்லது அருட்சத்தி

(தொடரும்.)

# காஞ்சிக் கடிகை

திரு. K. M. வேங்கடராமையா அவர்கள் M. A.,
திருப்பனந்தாள்.

[மலர் 15. இதழ் 7-ன் தொடர்ச்சி]

கடிகையின் அளவு

இக்கடிகையிற் கற்றவருடைய அளவு தெரிவதற்குத் தக்க ஆதாரங்கள் இல்லை. எனினும் காஞ்சிக் கடிகையில் பன்னூறு மாணவர்கள் கல்வி கற்றிருத்தல் வேண்டும் என்றும் பல பேராசிரியர்கள் இருந்திருத்தல் வேண்டும் என்றும் கோடலில் தவறில்லை. பல்லவ மல்லனாகிய இரண்டாம் நந்திவர்மனுடைய 12-ம் ஆண்டுக்குரிய திருவல்லம் சாஸனம் ஒன்று (S. I. I. Vol. III Part I Page 91) இது அழித்தான் கடிகை ஏழா இருவரையும் கொன்ற பாவத்திற் படுவான் என்று காணப்படுகிறது. ஏழா இருவர் என்றது ஏழாயிரவர் என்பதாகும். இக் கல்லெழுத்தில், கடிகை யாளரைக் கொல்வது குறிப்பிடத் தக்க பாவங்களுள் ஒன்றாகக் கருதப்பட்டது என்று அறியலாம். இக்கடிகை ஏழாயிரவர் என்றது காஞ்சிக் கடிகையாரையே என்று கோடலில் தவறில்லை. இந்நந்திவர்மன் காலத்தில் நந்திவர்மனை அரசனாக்குவதில் பெரும் பங்குகொண்டவர் இக்காஞ்சிக் கடிகையார் என்று வைகுந்தப் பெருமாள் கோயில் சிற்பக் கீழ்க் கல்லெழுத்துக்களினின்றும் அறியலாகும். இரண்டாம் விக்கிரமாதித்தனது கைலாசநாதர் கோயிலிலுள்ள கன்னடக் கல்வெட்டு "இவற்றை அழித்தார் கடிகையாரைக் கொன்றவர் புகும் உலகிற் புகுவர்" என்று கூறுகிறது. (அன்றியும், கடிகையார் பிராமணர்களே என்றும் மேலே கூறப்பட்டது) எனவே திருவல்லம் கல்லெழுத்தில் குறிக்கப்பெற்றவர் காஞ்சிக் கடிகையாரே என்று கொள்ளலாம். அங்ஙனமாயின் தில்லை மூவாயிர

வர் என்று குறிக்கப்பெற்றது போன்று காஞ்சிக் கடிகையாரும் கடிகை ஏழாயிரவர் ஆதல்கூடும். எனவே காஞ்சிக் கடிகையில் ஏறத்தாழ ஏழாயிரவர் இருந்தனர் போலும் என்று கருதலாம்.

## கடிகையின் செல்வ நிலைமை

பல்லவ அரசனது நேர் பார்வையிலும் பாது காப்பிலும் காஞ்சிக் கடிகை இருந்தது முன்பே கூறப்பட்டது. கடிகை யாளர்க்குப் பிற இடங்களிலும் நிலம் இருந்தமை ஒரு கல் லெழுத்தினின்று (285 of 1921; 119 of S. I. I. Vol XII) தெரிய வருகிறது. இது கோப்பெருஞ்சிங்கனது 5-வது ஆண்டுக் குரிய ஆத்தூர்க் கல்வெட்டு. இதில் "கடிகையாளர் இறையிலி நிலம் மூன்றே காலும்" என்றுள்ளது, இதனால் காஞ்சிக் கடிகைக்குச் சொந்தமான நிலங்களும் இருந்தன வாதல் வேண் டும் என்று தெரிய வருகிறது. (இது கி. பி. 1240-க்குரியது.)

## கடிகை காஞ்சியில் எப்பகுதியில் இருந்தது?

இனிக் காஞ்புரத்தில் இக்கடிகை எவ்விடத்தில் அமைந் திருந்தது என்பது ஒரு நல்ல கேள்வி. வேதாகமங்களைப் படிப் பிக்கும் கல்வி நிலையங்கள் பெரும்பாலும் பண்டைக் காலத்தில் கோயில்களில் அமைந்திருந்தன என்பது யாவரும் அறிந்ததே. காஞ்சிக் கடிகையும் காஞ்சிபுரத்தில் மிகப் பழமையான கோயில் களுள் ஒன்றில் இருந்திருத்தல் வேண்டும் என்று எதிர்பார்க்க லாம். கச்சிநெறிக் காரைக்காடு, கச்சி ஏகம்பம், திருமேற்றளி என்பன காஞ்சிக் கோயில்களுள் மிகப்பழமை வாய்ந்தவை. இவற்றுள் முதலிரண்டைச் சம்பந்தரும், பின்னிரண்டை அப்பரும் கி. பி. 7-ம் நூற்றுண்டில் பாடியுள்ளனர். ஐயடிகள் காடவர் கோனும் க்ஷேத்திரத் திருவெண்பாவில் கச்சி ஏகம்பத் தைப் பாடியுள்ளார். எனினும் அப்பர் திருமேற்றளியைப் பாடிய பொழுது 'கல்வியிற் கரையிலாத காஞ்சி மாநகர்' என்று குறிப் பிட்டுள்ளார். எனவே கச்சிமேற்றளியில் கடிகை இருத்தல் கூடும் என்று ஊகிக்கலாம்; துணிவாகக் கூற இயலாது. இனி அப்பர் காலத்துக்குப் பிற்பட்ட இராச சிம்மனுல் கைலாசநாதர் கோயில் எனப்பெறும் இராசசிம்மேசுவர க்ருஹம் எடுப்பிக்கப் பெற்றது. அங்கு விக்கிரமாதித்தன் கல்வெட்டுக்காணப்

படுகிறது என்றும் அவ்வெழுத்துக்களில் அழித்தார் கடிகையா ளரைக் கொன்ருர் புகும் உலகில் புகுவர் என்றும் கூறியிருக் கிறது என்றும் மேலே கூறப்பட்டது. கடிகையாளரைக் கைலாச நாதர் கோயில் கல்வெட்டிற் கூறியுள்ளமையால் கைலாச நாதர் கோயில் கட்டிய பிறகு கடிகை கைலாச நாதர் கோயிலில் நடைபெற்றிருத்தல் கூடும் எனக் கொள்ளுதல் தகும். இனி இவ்வூகத்தை உறுதி செய்வதற்குத் தண்டியலங்கார மேற் கோட் பாடல் துணை புரிகிறது. வடமொழித் தண்டி கைலாச நாதர் கோயில் கட்டிய கொற்றவனுகிய இராசசிம்மன் காலத் தவர்; ஆனல் தமிழ்த் தண்டியோ பிற்காலத்தவர். ஆயினும் இம்மேற்கோட் பாடலிற் கண்ட பொருள் கடிகை இருந்த இடத்தை நிர்ணயிக்கப் பெரிதும் துணைபுரிகின்றது.

காஞ்சிபுரத்துக் கிழக்கெல்லையில் இற்றை ஞான்றும் வரதராசப்பெருமாள் கோயில் இருக்கிறது; மேற்கில் கைலாச நாதர் கோயில் இருக்கிறது. வடக்கிலும் தெற்கிலும் இரண்டு ஏரிகள்; அவற்றுள் ஓர் ஏரிக்குப் பெயர் மும்முடி சோழப் பேரேரி என்று கூறப்பட்டுள்ளது (A. R. No. 35 of 1888.) இது காஞ்சிபுரத்துக்கு வடக்கில் அமைந்திருத்தல் கூடும். தெற்கி லும் ஓரிரண்டேரிகள் இருந்தமை கல்வெட்டிற் குறிக்கப்பட்டுள் ளன. இனி, மேற்கில் கடிகை இருந்ததாகக் காஞ்சியை மயிலுக்கு ஒப்பிட்டுக் கூறக் கருதிய தண்டி ஒரு பாட்டில் பாடுகிருர்:—

"ஏரி யிரண்டும் சிறகா எயில்வயிருக்
காருடைய பீலி கடிகாவா—நீர்வண்ணன்
அத்தியூர் வாயா அணிமயிலே போன்றதே
பொற்றேரான் கச்சிப் பொலிவு."

இதில் 'கடிகாவா' என்றது கடிகாவாக என்பதன் ஈறு தொகுத் தல். கடிகா என்பது காஞ்சிக் கடிகை யாகும். இங்ஙனம் கொள்ளாது கடி கா எனக் கொண்டு வளம் பொருந்திய சோலை என்றே இந்நாளும் பொருள் தரப் பெறுகின்றது. சம்பந்தர்,

"குருந்தம் மல்லிகை கோங்கு மாதவிநல்ல குராமரவம்
திருந்து பைம்பொ ழில்கச்சி யேகம்பம்"

'சேறுலாம் பொழிற் கச்சி யேகம்பம்'

'ஏரினுர் பொழில் சூழ்ந்த கச்சியேகம்பம்'

என்ற விடங்களில் கச்சிக்கு அடையாகப் பொழிலைக் கூறினுர்

'கச்சிதன்னுள் திண்ணமாய் பொழில் சூழ்ந்த ஏகம்பம்'

'கச்சிமாநகருள் ஏலம்நாறிய சோலைசூழ் ஏகம்பம்'
கச்சி மாநகருள் மரவம் சூழ் பொழில் ஏகம்பம்'

என்ற இடங்களில் ஏகம்பத்துக்கு அடையாகப் பொழிலைக் கூறியுள்ளார். ஏகம்பத்துக்கும் மேற்கில் அமைந்ததே கைலாச நாதர் கோயில்; சம்பந்தர் காலத்துக்குப் பிறகு இராசசிம்மனுல் கட்டப் பெற்றது; இற்றை ஞான்று வயல்களான் சூழப் பெற்றிருப்பது; அந்நாளில் மாடமாளிகைகளான் சூழப்பெற் றிருந்தது. தண்டி, இராச சிம்மன் காலத்திருந்தவர். ஆகவே கயிலாசநாதர் கோயிலை மேற்கெல்லையாகக் கூறலையே எதிர் பார்க்கலாம். ஏகம்பம் சூழ்ந்த பொழிலைக் கூறினுர் எனல் பொருத்தமில் கூற்றும். அன்றியும் கைலாசநாதர் கோயிலைக் கூறுவதினும் அங்கிருந்த கடிகையைக்கூறினுர் எனல் சாலப் பொருந்தும். மயிலுக்குப் பீலி பொலிவும் பெருமையும் தருவது போலக் காஞ்சிக்குக் கடிகை அழகும் சிறப்பும் தந்தது. எனவே இப்பாடலிற் கண்ட கடிகா என்பது காஞ்சிக் கடிகை என்றும் அது காஞ்சிபுரத்தில் மேற்குப் பகுதியில் இருந்தது என்றும் கருதலாம்.

தடை :

'கடிகா' என்று ஆகாரவீற்று வட சொல் 'கடிகை' என்று ஐகார வீற்றுடன் தமிழில் வழங்கும்; ஆகவே கடிகாவா என்ற விடத்துக் கடிகா என்று ஆகாரவீற்றுடன் மேல் குறித்த தண்டி யலங்கார மேற் கோட் பாடலில் இருக்கமுடியாது என்றும் "கடி காவா" என்று பிரித்துக் கா என்பதற்குத் தரும் சோலை என்ற பொருள் பொருந்தும் என்றும் கூறுவர். அங்ஙனமாயின் அப் பாட்டில் "கடிகையா" என்று முதலிற் பாடம் இருந்து பின்னர் அதன் பொருள் மறக்கப் பெற்றுக் "கடிகாவா" என்ற பாடம் தோன்றியிருத்தல் கூடும் என்றும் நினைக்க இடமுண்டு.

கட்டுரைக்கு ஆதரவுகள் :

இதுகாறும் காஞ்சிக் கடிகை குறித்து எழுதியவற்றுள் பல செய்திகளும் திரு R. கோபாலன் அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய History of the Pallavas of Kanchi என்ற நூலிலும், திரு மீனுட்சி அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய Social Life and Administration under the Pallavas என்ற நூலிலும் S. I. I. Vol. XII The Pallavas என்ற நூலிற் கண்ட ஆங்கில முகவுரையிலும், Dr. இராசமாணிக்கனுர் M.A., M.O.L., Ph. D. அவர்கள் எழுதிய 'பல்லவர்' வரலாறு' என்ற நூலிலும், "ஞானசம்பந்தம்" இதழில் எழுதப்பெற்ற 'சிற்பங்கள் கூறுவன' என்றவிளக்கக் கட்டுரையிலும் வெளிவந்துள்ளன. யாவற்றையும் ஒன்று சேரத்தொகுத்துத் தருதலே இக்கட்டுரையின் நோக்க மாகும்.

---

# திருவருட்பயன் — தெளிவுரை

பண்டித வித்துவான், சைவப் புலவர், சித்தாந்த நன்மணி,
திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள்,
தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்,

---

(மலர் 15. இதழ் 7-இன் தொடர்ச்சி)

## 8. இன்புறு நிலை.

அஃதாவது உயிர்கள் பேரின்பத்தைப் பெற்று இன்புறும் நிலைமையாம். மேல் உயிர் திருவருள் விளக்கத்திற்கு ஆளாகு மாறு கூறினார். இதனுள் அத்திருவருள் விளக்கத்தினால் பெறும் பேரின்ப நிலையைக் கூறுதலின் மேலை யதனோடியைபுடைத் தாயிற்று.

71. இன்புறுவார் துன்புறுவார் இருளின்எழும் சுடரின்
பின்புகுவார் முன்புகுவார் பின்.

(தெ — ரை) ஆணவ இருளை நீக்குதற்காக மேல் எழுகின்ற திருவருளின் பின்னே செல்வார், இன்பம் அடைவர். அத்திரு வருளைப் பின்னாக்கித்தான் முன் செல்வார் துன்பம் அடைவர் என்பதாம்

திருவருள் பின்னே செல்லுதலாவது எல்லாவற்றிற்கும் காரணமானவன் இறைவன் என்றும், அவனருள் வழிச் செல்லல் அல்லது நமக்கென ஏதும் உரிமையில்லை என்றும் நினைந்து வாழ்தலாம். இவ்வருள் வழி நின்றதாலேயே அப்பர் பெருமானும் 'இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை' என அருளினார். இருள்— ஆணவம். சுடர்-ஒளி (திருவருள்).

சுடரின் பின்புகுவார் இன்புறுவார், பின்புகுவார் துன்புறு வார் என நிரல் நிறையாகக் கொள்க. 'துன்பார்' எனப் பாடங்

கொள்வர் நிரம்ப அழகிய தேசிகர், சிந்தனையுரைகாரர், சு. சிவ பாத சுந்தரம் ஆகியோர்.

72. இருவர் மடந்தையருக்(கு) என்பயன்? இன்புண்டாம்
ஒருவன் ஒருத்தி யுறின்.

(தெ - ரை.) இரு பெண்கள் தம்முள் கூடின் என்ன பயன் உண்டு? ஒன்றுமில்லை. ஆனால் ஒருவனும் ஒருத்தியுமாகக் கூடின் பெரிதும் இன்பம் உண்டாகும் என்பதாம்.

இது ஒட்டணியிற்பாற்படும். ஒருவனும் ஒருத்தியும் கூடின் இன்பம் உண்டாகுமேயன்றி, ஒரு பெண்ணுடன் இன்னொரு பெண் கூடின் இன்பம் உண்டாகாது என்ற இதனால், உயிர் திருவருளின் துணையால் சிவத்தைக் கூடினால் இன்பமாவதன்றித் திருவருள் துணையுடன் மட்டும் வாழ்ந்தால் இன்பம் இல்லை என்னும் கருத்துப் பெறப்பட்டதாகும். "தாயுடன் சென்று பின் தாதையைக் கூடி ஏயுமதே நிட்டை" என்னும் அருள்மொழி ஈண்டு நினைதற்குரியதாகும்.

73. இன்பதனை எய்துவார்க்(கு) ஈயும் அவர்க்(கு)உருவம்
இன்பகனம் ஆதலினால் இல்.

(தெ – ரை.) இறைவன் தன்னை வந்தடைந்தார்க்கு இன் பத்தைத் தருவன். அவனது வடிவமே இன்ப வடிவு ஆதலின், தான் அவ்வின்பத்தை நுகருவதில்லை என்பதாம்.

இதனால் உயிர்களுக்கு இன்பத்தை அளிக்கும் இறைவன் அவற்றிற்கு அதனைத் தருதலின்றித் தான் அதனை நுகரான் என்பது பெற்றும். காரணம் தானே இன்ப உருவாய் நிற்றலி னால். இறைவன் இன்ப வடிவினன் என்பதை,

"ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பமே;"
"அந்தமிலா ஆனந்தம் அணிகொள் தில்லை கண்டேனே;"

என்றல் தொடக்கத்துத் திருவாக்குகளாலும் அறியலாம். இன் கனம்—இன்ப வடிவம்.

இதற்கு இவ்வாறன்றி, "பொருந்துகிற பெயர்களுக்கு இன்பத்தைக் கொடுப்பவன்; கர்த்தாவுக்குத் திருமேனி இன்பக் கட்டி; அதென்போல வென்னில் சர்க்கரையைப் புசிக்கிறவன் ரசம் பெறுவதொழிந்து அவன் சர்க்கரைக்குக் கொடுக்கும் ரசமில்லை ஆகையினாலே, ஆன்மாக் கர்த்தாவுக்கு இன்பத்தைக் கொடுக்க வேண்டுவதில்லை" என்றுரைப்பாரும் [1]உளர்.

74. தாடலைபோல் கூடியவை தான்நிகழா வேற்றின்பக்
கூடலைநீ ஏகம்எனக் கொள்.

(தெ–ரை) தாள் என்னும் சொல்லும், தலை என்னும் சொல்லும் புணர்ந்து (தாள் + தலை) தாடலை என்னும் ஒரு சொல்லானது போல, உயிரும் இறையும் சேர்ந்து பிரிக்க இயலாத அப்பேரின்பக் கலப்பே அத்துவிதம் ஆயிற்று எனக் கொள்க என்பதாம்

தாடலை என்னும் சொல் புணர்ச்சிக்கண் ஒரு சொல்லாய்ப் பிரிந்துழி இரு சொல்லாய் நிற்கிறது. அதுபோலவே உயிரும் இறையும் நிற்கும் முறைமை ஆகும். இறைவன் பெத்தத்திலும் முத்தியிலும் உயிருடன் கலந்து நிற்பினும், பெத்தத்தில் ஆணவக் கலப்பினால் இரண்டாயும் முத்தியில் அவ்வாணவம் தன் தன்மை கெட்டு நிற்றலின் ஒன்றாயும் தோன்றும். முத்தியில் ஒன்றாய் நிற்றலை அத்துவிதம் என்பர். துவிதம்-இரண்டு. அத்துவிதம்-இரண்டல்லாதது. இரண்டல்லாதது என்று கூற வேண்டுமே யன்றி இரண்டும் ஒன்றே என்றல் கூடாது. முத்தியிலும் இறைவன் ஆண்டானாய், உயிர் அடிமையாய் நிற்பதன்றி உயிரே இறையாய் நிற்றல் இல்லை என்க. ஆதலினால்தான் உயிரும் இறையும் முத்தியில் நிற்கும் நிலையை அத்துவிதமாதல் என விளக்குவர். இறைவனது தாளில் உயிராகிய தலை இயைந்து நிற்றலே பேரின்பம் ஆதலின் 'தாடலை' என்ற சொல்லால் இவ்வுண்மையை விளக்கினார்.

"கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை"

---

1. சிந்தனை யுரை

"தருவாய் எனக்குன் திருவடிக்கீழோர் தலைமறைவே"

"அருளினாலே தாளிணை தலைமேல் சூட்டும்"

என்றல் தொடக்கத்துத் திருவாக்குகளாலும் இவ்வுண்மையை அறியலாம். முத்தியில் இறையும் உயிரும் ஒன்றுதல் போல இருப்பினும் அவை ஒன்றல்ல என்பார் 'ஏகம் என' என்றார்.

75. ஒன்றாலும் ஒன்று(து) இரண்டாலும் ஓசையெழா(து)
என்றால்ஒன்(று) அன்றுஇரண்டும் இல்

(தெ-ரை) உயிரும் இறையும் ஒரு பொருளே என்றால் முத்தியில் அவை ஒன்றாக வேண்டுவதில்லை. இரண்டென்றால் பேரின்பம் உண்டாகாது. ஆதலின் அவை முத்தியில் இயைந்து நிற்கும் முறைமை ஒன்று என்பதும் இல்லை; இரண்டு என்பதும் இல்லை. இரண்டு அல்லாதது (அத்துவிதம்) எனக் கூறவேண்டும் என்பதாம்.

மேல் முத்தியில் உயிரும் இறையும் இயைந்து நிற்றலை அத்துவிதம் என்ற சொல்லால் விளக்கினார்; இதனுள் அங்ஙனம் கூறற்குக் காரணத்தை விளக்கியுள்ளார். "என்றாலும் ஓரிரண்டும் இல்"எனப் பாடங்கொள்வர் தே. ஆ. சினிவாசன் அவர்கள்.

(தொடரும்)

# திருவடிப் பெருமை

மதுரகவி, திருமுறைச்செம்மல், வித்துவான்,
திரு. தா. ம. வெள்ளை வாரணம் அவர்கள்,
தமிழ்ப்பேராசிரியர்,
செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.



**முன்னுரை :**

என்றும் நின்று நிலவும் அடிகளே இறைவன் அடிகள். அவ்வடிகள் பெருமையைத் தருவன; பெருமைக்கும் உரியன. பெரியோர்களால் பாராட்டப்படுவன; நாமமெல்லாம் சென்று சேரும் புகலிடமாகவும் விளங்குவன. அவைகளைப் பற்றி ஆன்ற விந்தடங்கிய சான்றோர் பலர் கூறியுள்ள செய்திகளைச் சிறிது நோக்குவாம்.

**நாவரசர் நவின்றது :**

திருவையாற்றுப் பதிகங்களில் ஒருபதிகம் முழுவதும் நாவரசரால் திருவடிப் பெருமை பேசப்பட்டிருக்கிறது. அப்பதிகத்தில் இருபது பாடல்கள் இருப்பது திருவடிப் பெருமையை இரட்டிப்பாக்குகிறது. பாடல்களுள் ஒன்று வருமாறு: —

'சிந்திப் பரியன; சிந்திப் பவர்க்குச்
சிறந்துசெந்தேன்
முந்திப் பொழிவன; முத்தி கொடுப்பன;
மொய்த்திருண்டு
பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன;
பாம்புசுற்றி
அந்திப் பிறையணிந் தாடும் ஐயாறன்
அடித்தலமே,"

இறைவனது அடிகள் சிந்திக்க-(எண்ண) முடியாதவை; நினைக்க வல்ல அடியார்க்குச் செந்தேனினும் இனிமை தருவன; முத்தியும் தருவன; முத்தியை அடையும் வழியாக வினைகளையும் நீக்குவன; அவ்வடிகள் திருவையாற்றப்பனது திருவடிகள் ஆகும்.

மேலும் திருமாற்பேறு பதிகத்திலும் திருவடிப் பெருமையை நாவுக்கரசர் கூறியுள்ளார். மற்றோர் இடத்தில் "கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே" என்று குறிப்பிடுகின்றார். கொய்யும் தகைத்தாயும் கைக்கு அணித்தாயும் விளங்கும் தாமரை மலரைப் போல; இறைவனது அடியும் நெருங்குவதற்கு உரித்தாயும் அடியார்க்கு அணித்தாயும் விளங்குகின்றன என்கிறார்.

குருபரர் கூறியுள்ளது:

குமரகுருபர சுவாமிகள் திருவாரூர் நான்மணி மாலையில்,

"மிகப்பெரும் தொண்டரோடு இகலிமற் றுன்னொடும்
பகைத்திறம் பூண்ட பதகனே எனினும்
நின்திருப் பாதம் நேர்வரக் கண்டு
பொன்றின னேனும் புகழ்பெற் றிருத்தலின்
இமையா முக்கண் எந்தாய்க்கு
நமனுர் செய்த நற்றவம் பெரிதே."

என்று பாடியுள்ளார். நமன் நற்றவம் செய்துவிட்டான்; எதற்கு என்கிறீர்களா? இறைவனது திருவடியைக் காண்பதற்குத்தான்; எப்படி? எத்தனையோ தேவர்களும் முனிவர்களும் காத்துக் கொண்டிருக்கையில் நமன் சிவனடியாரைப் பகைத்துக்கொண்ட போதும் இறைவனையும் எதிர்த்த போதும் இறைவனது திருவடியை நேர்வரக் கண்டுவிட்டான். அவ்வடிகளால் உதைபட்டு இறந்தானாயினும் மீண்டும் உயிர்பெற்றுப் புகழுடன் இன்றும் கூட வாழ்கிறான். ஆகவேதான் நமன் செய்த தவம் பெரிது என்று குருபரர் நவில்கின்றார்.

இக்கருத்தை உட்செறிந்து, "கூற்றம் மன்னதோர் கொள்கை என் கொள்கையே" என்ற மணிவாசகர் வாக்கும் விளங்குகின்றது.

**மணிவாசகர் மொழிந்தது:**

திருவாசகத்தில் "பாதாளம் ஏழினும் கீழ்ச் சொற்கழிவு பாதமலர்" என்று திருவடிப் பெருமையை மணிவாசகர் மொழிகின்றார். திருமால் கேழலாக வடிவெத்துப் பூமியைப் பிளந்தும் இறைவன் அடிகளைக் காணமுடியவில்லை. அம்முறையில் இறைவனது அடிகள் பாதாளம் ஏழினையும் கடந்து அப்பால் போய் விட்டன. அதுமட்டுமன்றி அவ்வடிகள் சொற்களாலும் கூற முடியாத அளவுக்கு அப்பாற் பட்டனவாகும்.

**சிவப்பிரகாசர் செப்பியது:**

பிரபு லிங்க லீலை என்ற நூலில் சிவப்பிரகாச சுவாமிகள்,

"புரத்தை வென்ற நகைக்கும், மென்போதினேன்
சிரத்தை வென்ற செங்கைக்கும், சிலைமதன்
எரித்த கண்ணிற்கும் இன்றெனக் கூற்றடுஉத்
தரித்த வீரக் கழலொடு தாளுற."

என்று பாடியுள்ளார். இப்பாட்டில் நான்கு வீரச் செயல்கள் பேசப்படுகின்றன. (1) சிவபெருமான் முப்புரத்தைச் சிரித்து எரித்தது. (2) நான்முகனது தலையை நகத்தால் கிள்ளியது. (3) மன்மதனைக் கண்ணால் சுட்டெரித்தது. (4) கூற்றுவனைத் திருவடியால் உதைத்தது. இவற்றுள் முதலில் கூறிய மூன்று வீரங்களைக் காட்டிலும் நான்காவதாகக் கூறப்பட்ட வீரமே சிறந்தது என்று இறைவன் எண்ணினான். அதனால் அவ்வீரத்தைச் செய்த திருவடிக்கு மட்டும் வீரக்கழல் கட்டினான். அவ்வணியை மற்ற வீரச் செயல்கள் புரிந்த உறுப்புக்களுக்கு அணியவில்லை. இங்கே சிறிது சிந்திக்க வேண்டும்.

தேவர்களின் வேண்டுகோளுக்காக முப்புரம் எரிக்கப்பட்டது. பிரமனது செருக்கு ஒடுங்குவதற்காக நான்முகன் தலை கிள்ளப்பட்டது. தனது பெருமையைக் காட்டுவதற்காக மன்மதனது உடல் எரிக்கப் பட்டது. ஆனால் அடியாரைக் காப்பதற்காக எமன் உதைக்கப் பட்டான். இந்நான்கு செயல்களும்-செய்யப்பட்டாரின் சால்பொடு நோக்கும்போது அடியாரின் பொருட்டு நிகழ்ந்ததே

மேலாக மதிக்கப்பட்டுத் திருவடிக்கு வீரக்கழல் கட்டப்பட்டது என்கிறுர் சிவப்பிரகாசர்.

வள்ளுவனுர் விள்ளியது!

திருவடிப் பெருமையைத் திருவள்ளுவ நாயனுர் திருக்குறளின் முதல் அதிகாரமான கடவுள் வாழ்த்தில் ஏழிடங்களில் இயம்பி உள்ளார். அவை வருமாறு :– (1) வாலறிவனது நற்ருளேத் தொழுவதே கற்றதனுலாய பயன் ஆகும்.(2)இறைவனது மாணடியைச் சேர்ந்தார் நிலமிசை நீடு வாழ்வார். (3) அவனது அடியைச் சேர்ந்தார்க்கு யாண்டும் இடும்பை இல. (4) அவனது தாள் சேர்ந்தார்க்கல்லால் மற்றவர்களால் மனக்கவலேயை மாற்ற முடியாது. (5) அவன் தாள் சேர்ந்தார்க் கல்லால் பிற வாழி நீந்தல் அரிதாகும். (6) எண்குணத்தான் தாளே வணங்காத் தலேயால் பயனில்லே. (7) இறைவனடி சேர்ந்தார் பிறவிப் பெருங்கடல் நீந்துவர்.

திருவடித் தீக்கை:

தீக்கை பல வகைப்படும். அவற்றுள் திருவடித் தீக்கையே மிகச் சிறப்பானது. நாவுக்கரசர் தனது முடியில் திருவடி சூட்டப்படவேண்டும் என்று விண்ணப்பித்தார். அவ்வாறே திருநல்லூரில் அவருக்கு நனேந்தனேய திருவடியைச் சூட்டி வைத்தான் இறைவன்.

தாராசுரத்தில் வெட்டப்பட்டிருக்கும் அறுபத்து மூவரின் வரலாற்றுச் சிற்பத்தில், நாவுக்கரசரின் பகுதியில் திருவடி சூட்டும் காட்சி ஒன்று மட்டுமே சிற்பமாக வடிக்கப்பட்டிருக்கிறது என்ருல் இதன் பெருமையை என்னென்று கூறுவது ?

சுந்தரருக்குத் திருவதிகை வீரட்டானத்தில் இறைவன் திருவடியைச் சூட்டியருளினுன். மணிவாசகர்க்குத் திருப்பெருந்துறையில் திருவடி சூட்டப்பெற்றது.

கேதார யாத்திரை :

இத்துணைப் பெருமை வாய்ந்த இறைவன் திருவடிகளேப் பற்றுதற்கு நமது அடிகளால் திருக்கோயில்களேச் சூழ்வர

வேண்டும். தலயாத்திரை செய்ய வேண்டும். சிறப்பாகக் கேதார நாதனின் பாதாரவிந்தத்தைப் பரவ மலைமீது அடியூன்றி நடக்க வேண்டும். இந்த யாத்திரைக்காகத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித்தம்பிரான் சுவாமிகள் அவர்கள் ஒரு நிதி ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

"கால்காள் வலம்வருவீர்— கமழ்
கேதார மாமலையில்
மேலே ஏறிட வேறிதி வைத்தானைக்
கால்காள் வலம்வருவீர்."

*ஸ்ரீ அருள்நந்தி சுவாமிகள் திருவங்கமாலை.*

இது மட்டுமன்றிக் காசி யாத்திரை நிதிகள் பலவும் கூட ஏற்படுத்தியிருக்கின்றார்கள்.

முடிவுரை :

இவ்வாறாகத் திருவடிப் பெருமையைச் சிந்தித்துக் கொண்டே சென்றால் அதற்கொரு முடிவேயில்லை. தொடுமணற் கேணிபோல் இன்ப நீர் சுரந்து கொண்டேயிருக்கும். ஆகவே, அவ்வடிகளை இடையறாது சிந்தித்து மேன்மையுறுவோமாக.

'அருந்தவத்தோர் வாழி! அருள்நந்தி வாழி!
குருபரரின் சீர்மரபர் வாழி!—திருவோங்கும்
காசி மடம்வாழி கந்தன் திருவடியை
நேசிப்பார் வாழி நெடிது.'

*ஸ்ரீ அருள்நந்தி சுவாமிகள் திருமும்மணிக்கோவை.*

குறிப்பு : *ஸ்ரீ அருள்நந்தி சுவாமிகள் திருவங்கமாலை, ஸ்ரீ அருள்நந்தி சுவாமிகள் திருமும்மணிக்கோவை என்ற பிரபந்தங்கள், திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியிலிருந்து (1959 ஆம் விகாரி ஆண்டு ஆவணி மூல நன்னாளில் வெளியிடப்பெற்றவை.)*

---

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 15, இதழ் 7-ன் தொடர்ச்சி]

## II

## THIRUNAVUKKARASU SWAMI

(More commonly referred to as APPARSWAMI)

45. செவிகாள் கேண்மின்களோ - சிவ - னெம்மிறை செம்பவள
மெரிபோன் மேனிப்பிரான்றிறமெப்போதுஞ்
செவிகாள் கேண்மின்களோ.

45. Ears of mine, hear His praise,
Siva, our flaming king.
Flaming as coral red His form:
Ears, hear men praises sing.

46. உற்றாருளரோ - உயிர் - கொண்டுபோம்பொழுது
குற்றாலத்துறை கூத்தனல்லானமக் குற்றாரு ளரோ.

46. What kinsmen in that hour
When life departs, have we?
Who but Kuttalam's dancing lord
Can then our kinsman be?

---

(தொடரும்)

# சிவம்

வித்துவான். திரு K. பிச்சுமணி அவர்கள்.

செம்மையையும் செழுமையையும் குறிப்பது சிவம்: சிவனுக்கும் சிவத்திற்கும் வேறுபாடுண்டென்பது சிலர் கொள்கை. சிவன் அழித்தற் கடவுள்; சிவம் முழுமுதற் கடவுள். சிவத்தைக் கண்டவர் மோனநிலை கொள்வர். மோனநிலை கண்டவர் சிவத்தைக் காண்பர். அயன், அரன், அரி மூவருமே சிவத்தின் கட்டளைப்படி நடக்கின்றனர் எனக் காஷ்மீரத்துச் சைவ மதம் விளம்புகிறது. சகரம் பிரமனையும், இகரம் விட்டுணுவையும், வகரம் ருத்திரனையும் குறிக்கின்றதாம். 'ம்' என்ற கடைசி எழுத்து எல்லாப் பொருள்களும்–பிரகிருதியும், ஆத்துமாக்களும் லயித்து மறைவுபெறும் முழுமுதற் கடவுளைக் குறிப்பிடுகின்றது.

அயனுக்குப் புராணங்களும் கதைகளும் உண்டு. அரனுக்கும் விட்டுணுவுக்கும் அதே போன்று உள்ளன. ஆனால் சிவத்தைப் பற்றிப் பேச வேத புருடனும் இயலாதெனக் கூறுகின்றன. ''யதோ வாசோ நிவர்த்தந்தே; அப்ராப்யமனஸா பெஹ'' என்று வேத புருடனும் சிவத்தைப்பற்றி வருணிப்பதில் தன் திறமை யின்மையைக் கூறியிருக்கின்றான்.

காஷ்மீரத்துப் பண்டிதர்கள் சிவம் தான் முழுமுதற் கடவுள் என்பதற்குப் பல காரணங்கள் கூறுகின்றனர். மேற்கோள்களும் பல கூறுகின்றனர். அயனுக்குப் படைத்தல் தொழிலும், அரிக்குக் காத்தல் தொழிலும், அரனுக்கு அழித்தல் தொழிலும், உளவாகையால் இம்மூவரையும் நியமிக்கும் படியான ஒரு முழுமுதற் கடவுள் இருக்கவேண்டு மல்லவா? அதுதான் சிவம். அயன் அரன், அரி–மூவருக்கும் சக்தி தருவது சிவம்,

# திருவருட்பிரகாச வள்ளலாரென்னும் சிதம்பர இராமலிங்க சற்குரு புலம்பற்கண்ணி*

தொருத்தவர், திரு. P. P. துரைசாமி அவர்கள்,
கோயமுத்தூர்.

[மலர் 15. இதழ் 6-ன் தொடர்ச்சி]

நூறவதா னம்செய்யுஞ் — நுண்ணறிவுள் ளந்தணர்க்குத்
தேறவரு முக்காலத் — தேர்ச்சியருள் சற்குருவே. 141

முத்தரன்பாற் கொள்ளுகின்ற — முவகையா ஞானசித்தி
யித்தகையென் றுன்னுருவில் — ஈடுதந்த சற்குருவே. 142

விடத்தை நடராசன் — விட்டுய வானந்த
நடராசன் நீயென்னும் — நாமமருள் சற்குருவே. 143

கண்கைக் ககப்படுதல் — கண்காணல் இன்மையுநின்
வண்கைக் கனியா — வடிவிலருள் சற்குருவே. 144

மாதவர்சேர் சித்தி — வளாகமதிலே மறைந்தாய்
ஏதறிவேன் உன்சித்தம் — என்னுடைய சற்குருவே. 145

எந்நாளோ காண்பேன் — எழிலார் திருமுகத்தை
யந்நாளே நன்றுளென் — றன்படைவேன் சற்குருவே. 146

கன்றுதன்தாய்ப் பசுவைக் — காணு தலமரல்போல்
இன்றுமுனைக் காணுமல் — ஏங்குகின்றேன் சற்குருவே. 147

எந்தவகை செய்தால் — இணையடியைக் காணவரும்
அந்தவகை யிதென் — றருள்செய்வாய் சற்குருவே. 148

---

*திரு. ச. மு. கந்தசாமி பிள்ளையவர்கள் இயற்றியது.

பெருங்கருணை யாலே — பெருநிலையைப் பெற்றும்
விரும்பிச் செய்யாது — மெலிவடைந்தேன் சற்குருவே. 149

சின்னஞ் சிறுவயதில் — சிற்றடியனென் ருண்டாய்க்
கென்னவெறுப்பின் றறியேன் — என்னுடைய சற்குருவே. 150

எண்ணாத எண்ணமெல்லாம் — எண்ணியேங்கு கின்றவென்றன்
கண்ணாரக் காணவருங் — காலம்எதோ சற்குருவே. 151

எங்குநின் பூரணத்தை — யென்னுட் கண்டின்புற்றே
தங்குமசை வின்மைதனைச் — சார்வேனோ சற்குருவே. 152

நித்தியமா மெய்ந்நிலையை — நின்னையன்றி யிவ்வுலகில்
சத்தியமாய் யாருரைப்பார் — சாற்றியருள் சற்குருவே. 153

முன்செய் தவத்தான் — முகமலரைக் காணலுற்றும்
பின்செய்த தீமையினால் — பேதுற்றேன் சற்குருவே: 154

பலவகைசெய் சித்திகளுள் — பண்புளநின் னன்பால்
சிலவே சரித்திரத்தில் — செப்பியுள்ளேன் சற்குருவே. 155

சற்குருவைக் கண்டவர்க்குச் — சஞ்சிதமே யில்லையென்று
நற்குரவர் சொன்னபடி — நம்பியுள்ளேன் சற்குருவே. 156

முன்பா டின்பாக — மொழிவார்பின் கற்றுணர்ந்தோர்
என்பா டறிந்தும் — இரங்கிலையே சற்குருவே 157

கண்ணே றுண்டாகும் — கனவினின் மெய்காட்டிலென்று
விண்ணே யெனுமருவாய் — மேவினையோ சற்குருவே. 158

தப்போ வனேகம் — தமியேன்செய் தேனெனினும்
எப்போது காண்பேனென் — றேங்குகின்றேன் சற்குருவே. 159

மாதர் வலையின் — மருவி ஏமாப்புற்றே
ஆதர வில்லாதிங் — கலைகின்றேன் சற்குருவே 160

(தொடரும்)

# அருள் நூலும் அகப்பொருளும்

திரு. A. C. ஷண்முக நயினர் அவர்கள்,
அட்வகேட், தென்காசி.



[மலர் 15. இதழ் 7-ன் தொடர்ச்சி]

ஓர் அழகிய பொழில். ஒரு தலைமகன் இனிமை நிறைந்த இப்பொழிலைச் சுற்றி வருகின்ருன். விளையாட்டு விருப்பால் அங்கே வந்தாள் ஓர் பெண். அவள் முகம் தாமரைப் பூபோல் மலந்திருக்கின்றது. கண்ணோ குவளை மலரென்ற நீலோற்பலம். மூக்கின் அழகு குமிழின் அழகை வெல்லும். நகிற்கண்கள் கோங்கின் அரும்புகளைத் தோற்கடிக்கும். காந்தள்மலர். இவள் அங்கைகள் ஒக்கும். இத்தனை பூக்களையும் உறுப்பாகக் கொண்டு தெய்வ மணங்கமழும் மாலை (ஒரு கோதை)ஒரு கொடி போலத் துவண்டு அன்னநடை வாயப்பெற்று காமன்றன் வென்றிக்கொடிபோல் விளங்குகின்ருள். என்னே! இவளழகு என்னே இவள் பேரெழில்! என்று வியக்கின்ருன்.

"திருவளர் தாமரை சீர்வளர் காவிகள் ஈசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் பைங்காந்தள் கொண்டோங்கு தெய்வம்
மருவளர் மாலையொர் வல்லியின் ஒல்கி யனநடைவாய்ந்து
உருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே"

இங்கு மாலையென்பது பெண்ணைக் குறிக்கும். கோதை என்பது போல வல்லியின் ஒல்கி என்ற மெல்லிய சொற்களால் தலைமக ளின் மென் சாயல் விளங்குகின்றது. அனநடை என்றதால் அவள் நடையின் தன்மை தெரிகின்றது. உருவளர் என்றதால் அழகு இன்னும் வளருமென்ற குறிப்புக் கிடைக்கின்றது. காமன் கொடி யாவர் மனதையும் கவரும்பான்மையதாகலின் இப் பெண்ணின் அழகு யாவர் மனதையுங் கவரும் என்று கொள் ளலாம். இப்பாட்டில் இன்னும் எத்தனையோ குறிப்புகள். பாடியவர் அறிவாற் சிவனே யொக்கும் மணிவாசகப் பெருமான். தில்லையின் சிறப்பையும் கூத்தன் சிறப்பையும் அகப் பொருட் டுறையிற் கூறுகின்ருர். ஓர் வியப்பு. தன்னைத் தலைமகளாக

வும் இறைவனைத் தலைமகனுவும் வைத்து மற்ற அருளாளர் பாடுவது வழக்கம். இங்கே தன்னைத் தலைமகனுகவும் இறைவனைத் தலைமகளாகவும் வைத்துப் பாடுகின்றார் திருக்கோவையாரில். இது ஓர் தனிச்சிறப்பு. இறைவனருளிலும் அழகிலும் வியப்புற்றுப் பாடியிருக்கின்றார்.

இவ்வரும் பாவையொத்து திருநாவுக்கரசர்பா ஒன்று கிடைக்கின்றது. எது முந்தியது எது பிந்தியது என்ற கேள்வி இங்கு வேண்டாம். பாட்டை மட்டும் கூறுகிறேன்.

"திருவமர் தாமரை சீர்வளர் செங்கழு நீர்கொள்நெய்தல்
குருவமர் கோங்கங் குராமகிழ் சண்பகங் கொன்றைவன்னி
மருவமர் நீள்கொடி மாடமலிமறை யோர்கள்நல்லூர்
உருவமர் பாகத் துமையவள் பாகனை உள்குதுமே."

சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர்புராணத் (திருநல்லூர்ப் பதிகம்) தில் சுந்தரரும் பரவையாரும் சந்திப்பதை இருபாக்களால் நயம்பட விரிக்கின்றார். சுந்தரர் பரவையாரைக் கண்டு (திருக்கோயிலில்!)

"கற்பகத்தின் பூங்கொம்போ? காமன்தன் பெருவாழ்வோ?
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ? புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ?
அற்புதமோ? சிவனருளோ? அறியேன்என் றதிசயித்தார்."

புயல் சுமந்து என்றது கருமேகத்தையொத்த கூந்தல். வில்–வளைந்த புருவம். குவளை–நீலோற்பலம் போன்ற கண். பவளம் போன்ற வாய்மலர்ந்த முகம். மதியைப்போன்ற நெற்றி. கொடிபோன்ற இடை. இவ்வளவும் உறுப்பினழகு. கற்பகத்தின் பூங்கொம்பு என்றதில் ஓர் நயம். இது தெய்வயானையம்மையைக் குறிக்கும். இவளை முதலிற் கூறியது சுந்தரர் பரவையாரை முதலாவதாக மணந்ததைக் குறிக்கும். முருகப்பிரான் தெய்வானையை முதலாவது மணந்ததின் குறிப்பும் பின்பு வள்ளிக் கொடியை மணந்தது போல தானும் பின் சங்கிலி நாச்சியாரை மணக்கின்ற குறிப்பும் அமைந்திருக்கின்றது. பரவையார் சுந்தரரைக் காணும் காட்சி:

"முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனே? பெருகொளியாற்
தன்னேரில் மாரனே? தார்மார்பின் விஞ்சையனே?
மின்னேர்செஞ் சடைஅண்ணல் மெய்யருள்பெற் றுடையவனே
என்னே!என் மனந்திரித்த இவள்யாரோ எனநினைந்தார்."

என்பது பாட்டு.

இவ்விரு பாட்டிலும் கருத்து இனிமையாக இருக்கின்றது. சுந்தரர் தெய்வானையை நினைக்கப் பரவையார் முருகப் பெருமானை நினைக்கின்றார். முருகு என்ற சொல் அழகு என்று பொருள்படும். அழகு என்றால் சுந்தரம். பரவையார் முருகனை நினைத்தலும் தலைமகன் பெயர் சுந்தரர் என்றிருத்தலும் ஓர் நயம். சுந்தரர் காமன்றன் பெருவாழ்வோ என்றார். பரவையார் பெருகொளியால் தன்நேரில் மாரனே என்றார். சுந்தரர் அற்பு தமோ என்றார். பரவையார் விஞ்சையனே என்றார். சுந்தரர் சிவனருளோ என்றார். பரவையார் மின்னேர் செஞ்சடையண்ணல் மெய்யருள் பெற்றுடையவனே என்றார். இவ்வாறு கருத்துப் போட்டியிட்டுக் கருத்தொருமை காட்டும் பாக்களின் அழகு ஓர் அற்புதமல்லவா? காணும் அழகைக் கூறுவதில் அழகுப் பொருள்கள் பலவற்றைக் கூறி உவமிப்பதால் அதில் அதோ இதோ என்று ஓர் ஐயம் நிகழ்கின்றது. பூங்கொம்போ? பெரு வாழ்வோ? விரைக்கொடியோ? முருகனே? விஞ்சையனே? மெய்யருள்பெற்றுடையவனே! என்பதால் ஐயம் வெளியா கின்றது. ஆயின் இந்த ஐயம் காட்சியழகின்தன்மையை அதி கப்படுத்திப் படிப்பவர் மனதில் ஓர் இனிமை தோன்றி வளர்வதற் குக் காரணமாயிருக்கின்றது.

திருவள்ளுவரும் காட்சியையும் ஐயத்தையுஞ் சேர்த்து

"அணங்குகொல் ஆய்மயில்கொல் கனங்குழை
மாதர்கொல் மாலுமென் நெஞ்சு"

என்று தலைமகன் கண்ட பெண் தெய்வ மகளோ! மென்சாயலும் அழகிய நிறமுமுடைய மயிலோ! அல்லது மானிட மகளோ! இவளை யின்னவென்று துணியமாட்டாது என்னெஞ்சு மயங்கு கின்றது என்று ஐயப்பாட்டையும் காட்சியின் அழகையுஞ் சேர்த்து இக்குறளியற்றியிருக்கிறார்.

ஐயம் நிகழ்ந்தபின்னர் இவள் பெண்ணெனத் துணிந்து அவள் குறிப்பினையறிதல்: "பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிறழ மின்னும் – பணியும் புரை மருங்குற் பெருந்தோளி படைக்கண்களே" என்றார் மணிவாசகப் பெருமான். தலைமகள் பெண் தன்மையால் தன்காதல் நிலையை வாயாற் கூறாது நாண முடைய நோக்காற் கூறுதலைத் தலைமகன் அறிகின்றான். மின்னலையும் பாம்பையும் ஒத்த இடையினையும் பெரிய தோளையுமுடைய இவள் கண் வேல்போல் கூர்மையாயிருக்கின்றது. பிறழுந் தோறும் பிறழுந்தோறும் பொது நோக்கத்தால் துன்புறுத்து கின்றது. ஆயின் அந்நோக்கில் நாணம் கலந்திருக்கின்றது. அந்நாணத்தில் அவளுடைய உளத்தின் கருத்து வெளிப்படு கின்றது. நான் படுந்துன்பத்திற்கு அவள் நாணமுடைய நோக்கு ஓர் மருந்தாகின்றது என்றறியலாம். "இருநோக்கு இவளுண் கண்உள்ளது ஒரு நோக்கு நோய்நோக்கு ஒன்று அந்நோய்க்கு மருந்து" என்ற திருக்குறளை இங்கு ஒப்பிடலாம். நோயும் மருந்தும் ஒரே பொருளில் என்றால் இது வியப்பல்லவா? எனக்கு அணியும் அமிழ்தமும் உயிரும் போன்றவன் தில்லை யிலிருக்கும் பெருமான். சிந்தாமணியைப் போன்று வேண்டுவார் வேண்டுவதை ஈந்தருளுங் குணமுடையான். தேவர்களாலறியப் படாதவன். வேதங்களாற் புகழப்படுபவன். இவன் திருவடியை வாழ்த்தாதவர் பிணியடைவர். அப்பிணிக்கு அவன் திருவடி களே மருந்து என்பது கருத்து.

உடலிற் சிறந்த உறுப்பு கண். மனோநிலையைக் காட்டும் (விருப்பு வெறுப்பு சினம் உவகை முதலிய உணர்ச்சிகளைத் தெரிவிக்கும் "மோப்பக் குழையுமனிச்சமுகந்திரிந்து – நோக்கக் குழையும் விருந்து" இங்கு கண் வேறுபட்டு நோக்குவதால் விருந்தினர் விருந்துக்கு உடன்படார் என்பது கண்ணின் ஒரு பார்வைக்கு உதாரணம். இஃதேபோல் ஒவ்வொரு குணத்துக்கும் மேற்கோள் பல.) அதனால் கண்ணையே சிறப்பாக அகப்பொருள் இலக்கிய இலக்கணங்களில் பேசுகின்றார்கள். தஞ்சைவாணன் கோவையில் "நீலவுண்கண் – கையாலழைப்பன போலிமையா நிற்குங் காரிகைக்கே என்றும் "பேதைதன்பார்வை............ இருந்துயர் நோய் தனக்கின் 'மருந்தாய்க் கண்ணிற் சிறந்த

உறுப்பில்லை யாவதுங் காட்டியதே.'' என்று கண்ணின் தன்மை யையும் சிறப்பையும் கூறுவது இங்கு குறிப்பிடத் தக்கது.

'' கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில.''

என்ற குறட்பாவையும்; ''எண்ணரு நலத்தினாள் இனையள் நின்றுழி—கண்ணொடு கண்ணிணை கௌவி யொன்றை யொன்று உண்ணவு நிலைபெறுதுணர்வு மொன்றிட — அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்'' என்ற கம்பர் கவியையும் அநுபவிக்கலாம்.

குறிப்பறிந்த தலைமகன் தலைமகளைக்கூடியபின் தன்மகிழ்ச் சியை வெளியிடுகின்றான். ''பெரும் போகம் பின்னும் புதிதாய் வளர்கின்றதே'' யென்று ஆராஇன்பத்தன்பு மீதூர வியக்கின் றான். இங்கே போகமென்பது இறைவனுடன் கலந்த நிலையி லுண்டாகும் இன்பம். அக்கலப்பின் இன்பத்தை யநுபவிக்க அனுபவிக்க அவ்வனுபவம் மேலும் மேலும் இனித்தமுடைய தாகவே தோன்றுகின்றது. நூல்களை ஆராய ஆராய முன்னறிவு அறியாமையாய் முடிகின்றது போல் தலைமகளிடஞ் செறியச் செறிய முன்னைச் செறிவு செறியாமையாய் முடி கின்றது என்று தன் ஆராமையைக் கூறுகின்றார் நமது புலவர்.

'' அறிதோ றறியாமை கண்டற்றால் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு.''

(தொடரும்.)



# தாயுமானவரின் — பராபரக்கண்ணிகள்

**Couplets in venerable adoration of the Omnipotent and Omnipresent**

sung by

St. THAYUMANAVAR

12

The whole world is often shaken by one kind of fear or other. But too much of fear destroys man, his free thinking, and his individuality. When a man is threatened by some earthly forces, he forgets everything, even the Supreme Being. Such a heart, full of fear and inferiority complex will not find a flourishing time. Hence the fear must be rooted out from the heart of the human beings in order to save their souls. The following couplet by our Poet-Saint entreats the Lord to bless him saying "Fear not"

பஞ்சரித்து நின்னைப் பலகால் இரந்ததெல்லாம்
அஞ்சலெனும் பொருட்டே யன்றோ பராபரமே!

(பொ – உரை) அடியேனுடைய எளிமைத் தன்மையைக் காட்டிப் பலநாளும் தேவரீரை அடியேன் யாசித்த தெல்லாம், அடியேனை 'அஞ்சாதே' என்று தேவரீர் சொல்லியருளால் பொருட்டே யன்றோ.

Oh.... Lord Supreme! Exhibiting all my meekness, I begged You incessantly all these days only for the word "Fear not" from You. Is it not so?

———

(தொடரும்)

---

Translated by Sri. K. PALANISAMY, M.A., Lecturer in Tamil, Sri. K. G. S. Arts College, Arulnandi Nagar,

# சுந்தரர் நாடகத்தில் நாவுக்கரசர்

திரு. இர. குழந்தைவேலு அவர்கள், எம். ஏ.,

---

1

பேராசிரியர் சுந்தரம்பிள்ளை மரபுநெறியை நன்கு உணர்ந்தவர். அவர்தம் மனோன்மணீயத்தகத்து மரபுநிலை திரியா மாட்சிய வாய்ப் புலப்படும் நுட்பங்கள் பற்பல. இத்தகு ஆணித்தரமான குறிக்கோளால் புகழ்பெருகிய இந்நுண்ணறிவாளர்,

"முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவன்இருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே"

என்னும் நாவுக்கரசர் தம் அகப்பொருள் வளத்தைத் தெள்ளிதின் மயக்கந்திர உள்ளத்தால் ஆழ்ந்து கருதி வாங்கிக்கொண்டவர். இதனை, மனோன்மணியது காதல்நெறிக் குறிப்புக்களை உள்ளுறையாகக்கொண்டு வளர்ந்து விளங்கும் கதை நடப்பால் துணியலாம். நாவரசர் தம் பாநலத்தைப் பேராசிரியர் சுந்தரனார் தம் கருத்துள் இருத்தி நாடக நூற்பண்பு குறைவுபடாது இனிது கலந்தமைத்த திறத்தில் இங்குக் கருத்துச் செலுத்தல் சுவை பயந்து இன்புறுத்துவது.

2

மனோன்மணியிடத்தில் புகழை ஈட்டி விளங்கிய நல்லியல்புகள் பல. அவை அவளை மாண்புறச் செய்தன. அந்நல்லாள்

வாழ்க்கை நலத்துக்கு உறுதுணையாகியது காதல் எனல் பொருந்தும். மேல்விளைவுகள் பல அக்காதலால் தோன்றின. இஃது ஈங்குக் கொள்ளவேண்டும் மாட்சியது.

## 3

மனோன்மணியும் வாணியும் கன்னிமாடத்தில் கழல் விளையாடினர். விளையாடலிடையே மனோன்மணி,

"ஏதடி வாணி! ஓதிய பாட்டில்
ஒருபெய ரொளித்தனை பெருமுச் செறிந்து
நன்று! நன்று! நின் நாணம்,
மன்றலு மானது போலும்வார் குழலே!"

(I, II : நேரிசை ஆசிரியப்பா : 1)

எனவும்,

"மறையேல்! மறையேல்! பிறைபழி நுதலாய்!
திங்கள் கண்டு பொங்கிய கடலெனச்
செம்புனல் பரக்கச் செந்தா மரைபோற்
சிவந்தவுன் கபோல நுவன்று நின்மனக்
களவெலாம் வெளியாக் கக்கிய பின்னர்
ஏதுநீ யொளிக்குதல்? இயம்பாய்
காதலன் நேற்றுனக் கோதிய தெனக்கே"

(I, II : நேரிசை ஆசிரியப்பா : 3)

எனவும்,

"ஏதடி! நுமது காதல் கழிந்ததோ?
காணு தொருபோ திரேமெனுங் கட்டுரை
வீணு யினதோ? பிழைத்தவர் யாவர்?
காதள வோடிய கண்ணுய்!
ஓதுவாய் என்பா லுரைக்கற் பாற்றே"

(I, II : நேரிசை ஆசிரியப்பா : 5)

எனவும்,

"ஏனிது! ஏனிது வாணி! எட்பூ
ஏசிய நாசியாய்! இயம்புக,
மனத்திடை யடக்கலே! வழங்குதி வகுத்தே"

(I, II : நேரிசை ஆசிரியப்பா : 7)

எனவும் வாணியுடன் நிகழ்த்தும் உரையாடல்களுள் ,அவள் மனத்தைப் பாலுணர்ச்சி வளைத்துக்கொண்டு அரும்பிப் பக்குவப் பட்டநிலையின் அறிகுறி சிறந்து விளங்குதல் கருதத்தக்கது. பாலுணர்ச்சியின் வயப்பட்ட மனோன்மணி முன்னர்,

"அறியா யொன்றும், அம்ம! அரிவையர்
நிறைவழி காதல் நேருந் தன்மை,
ஒன்றுங் கருதி யன்றவ ருள்ளஞ்
சென்று பாய்ந்து சேருதல், திரியுங்
காற்றும் பெட்புங் காரணம் இன்மையில்
ஆற்றவும் ஒக்குமென் றறைவர்
மாற்றமென்? நீயே மதிமனோன் மணியே!"

(I. II : நேரிசை ஆசிரியப்பா : 12)

என்று வாணி காதலின் பெற்றியை அளந்து உயர்த்துக் கூறினாள். 'அறியா யொன்றும், அம்ம!' என்று வாணி கூறிய போது,

"புதுமைநீ புகன்றது, பூவைமார் காதல்
இதுவே யாமெனில் இகழ்தற் பாற்றே!
காதல் கொள்ளுதற் கேதுவும் இலையாம்!
தானறி யாப்பே யாட்டந் தானும்!"

(I. II : நேரிசை ஆசிரியப்பா ; 13)

என்று சிறிது உணர்ச்சி பெருகக் 'காதலின் இயற்கை இன்னது; அறிவேன்; விளக்கம் வேண்டுமோ?, எனக் குறிப்புப்பொருள் கொள்ளும் வண்ணம் மனோன்மணி தன் மனத்தில் நிகழ்ந்த எண்ணத்தை வெளியிடு செய்தாள் என்ற உண்மை தோன்றும். அவள் நெஞ்சம் வலிந்து ஈர்த்த பாலுணர்ச்சியின் நற்கூறுகளில் படிந்து நின்றது. அந்த அறிவோடியைந்த மனவளர்ச்சி நுட்பத்தை உணர்தற்கு வாய்ப்பளிப்பது அப்பேச்சு.

"என்னுளம் போயிறந் ததுவே
மன்னிய ஒருவன் வடிவுடன் பண்டே"

(I. II : நேரிசை ஆசிரியப்பா : 14)

"மட்டள வின்றிக்
காதல் கதுவுங் காலை
ஓதுவை நீயே யுறுமதன் சுவையே"

(I. II : நேரிசை ஆசிரியப்பா ; 18)

என்னும் வாணியின் மொழிகளிலே மனோன்மணி நெஞ்சைவிட்ட சிறப்பு நினைவு கூரற்பாலது. அங்ஙனம் வாணியின் சொற்கள் மனோன்மணி கருத்தில் தோய்ந்ததாலே காதலை எளிதே எள்ளி நகையாடினுள் எனல்பொருந்தும். இங்கு அவள் கருத்தில் ஊன்றிய எண்ணம் உன்னத்தக்கது. இவ்வழியில் அவள் தன்னை உணர்த்தினுள் என்பது இங்குள்ள நுட்பம். காமச்செவ்வி நிகழும் பருவமெய்தியகாலை அவள் மனம் வாளா கிடக்க விரும்பவில்லை. எனவே, அவள் நெஞ்சம் ஓரிடத்தில் அடங்கி நிலைத்திருக்கத் தலைப்பட்டது. அக் குறிப்பினுல் எழுந்த செயல்வகைகளைத் தன் தலைக்கடனுகக்கொண்டு கண்காணித்த செவிலி,

“தாயே! வந்துபார்! நீயே வளர்த்த
முல்லையு நறுமுகை முகிழ்த்தது, வல்லை
காதலிற் கவிழ்வை போலும்!”

(I, II : நேரிசை ஆசிரியப்பா ; 44)

என்று வளரும் ஓர் உண்மையை எடுத்து மொழிந்தாள்.

4

பழித்த காதலே பாலுணர்ச்சிவழிப் பண்பட்டு அவளுள்ளத்தில் முகிழ்த்தது. இயற்கையின் கூறு எனச் சொல்லத்தகும் உயர்காதல் தன் இருப்பை வெளிக்காட்டத் தலைப்பட்டது; பற்றுதற்கு ஓர் உருவத்தையும் விழைந்தது. அம் மனோன்மணியது மனத்தின் இயல்பினை அவளே,

“‘நண்ப! என்னுயிர் நாத’வென் றேங்கிப்
புண்படு மவள்போற் புலம்புறல் கேட்டு”

(I, III : 159–60)

விரைந்த செவிலி கவலையுற்று உரைத்த வாய்மொழி எடுத்துக் காட்டிவிடும். “தவஞ்செய” (I, III : 188) விருப்புற்ற அவள் நெஞ்சத்தையும் அடிப்படுத்தி மேம்பட்ட காதல் பொலியச் செய்த உருவத்தின் தன்மையை வாணிபால்,

“இதுவென வொண்ணு உவமையி லொருவரை
எத்திற மென்றியான் இயம்ப”

(III, III ; 27–28)

என்று மனோன்மணி சொல்லியது வெளிப்படுத்தும்,

5

மேலேக்கண்ட மனோன்மணி முன்னம் அவனுடைய பெயர் புருடோத்தமன் என்பதனை அவாவிக் கேட்டறிந்திலள்; அவன் இருக்கும் வண்ணமும் கேட்டுணர்ந்திலள்; பின்னை அவனுடைய ஊர் வஞ்சிமாநகர் என்பதனையும் கேட்டுத் தெளிந்திலள். அம்மனோன்மணி,

" தன்னுரு மாறி
நேற்றிரா முதலாத் தோற்றுத் தோற்றம்,
மண்ணுள் மேனியும்; உண்ணுள் அமுதும்;
நண்ணுள் ஊசலும்; எண்ணுள் பந்தும்;
முடியாள் குழலும்; படியாள் இசையும்
தடவாள் யாழும்; நடவாள் பொழிலும்;
அணியாள் பணியும்; பணியாள் ஏவலும்
மறந்தாள் கிளியும்; துறந்தாள் அனமும்;
தூங்குவள் போன்றே ஏங்குவள்; எளியை
நோக்குவள் போன்றே நோக்குவள் வெளியை;
கேட்டுங் கேட்கிலள்; பார்த்தும் பார்க்கிலள்;
மீட்டுங் கேட்பள்; மீட்டும் பார்ப்பள்;
தனியே யிருப்பள்; தனியே சிரிப்பள்!
விழிநீர் பொழிவள்; மெய்விதிர்த் தழுவள்;
இங்ஙன மிருக்கில் எங்ஙன மாமோ?"

(I. IV : *146–160*)

என்னும் நிலையில் காதல் பழுத்தவுடன் மெய்மறந்து பித்தேறியவள் ஆனாள்; "பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்."

6

இங்ஙனம், மனோன்மணி அவனும் பகுதியானாள். இந்த ஈருயிர் ஒருயிரான நலனை,

" கண்ணால் எங்ஙனம் காணுவன்? கண்ணுளார்?"

(III. III : *23*)

எனவும்,

" எண்ணவும் படாஅர்! என்னுளம் உளாஅர்!"

(III. III : 25)

எனவும் அவள் வாணிக்கு முரணழகில் விளக்கி உண்மைப் படுத்தினுள். அவன் அவள் தன் உள்ளமாகிய நடுவுள் இருந் தான். எனவே அவள் அவன்தன் நடுவிருந்தாள் என்னும் இரண்டறக் கலப்பு எய்திய ஒருமை பெறப்படும். இவ்வண்ணம் காதல் அவளறியாப் புருடோத்தமனை அவள் மனத்தில் நிறுத்தி நிலைபெறுத்தியது.

7

இத்தீராக் காதலைக் குலைக்கப் பின்னர் வஞ்சகப் பெருமகன் குடிலனது சூழ்ச்சி வீறிட்டு முளைத்தது; முற்றித்துன்ப விளை வாய்க் கிளைத்துப் பெருகற்கு முன்னர் நெருக்குண்டது. சூழ்ச்சி யில் கைவல்ல அவன் மனம் எரிந்து நிற்கச் சூழ்ச்சி வீணே பாழாய்ச் சிறுமையுற்றுப் பழுதாயிற்று; அடியற்று வீழ்ச்சி யுற்றது.

8

மனம் நல்வழிப்படாக் குடிலன் விளைத்த துன்பத்தை மனோன்மணியது காதல்மாட்சி மாற்றியது. சுருங்கை வழியில் மனோன்மணி, வியக்கத்தக்கவாறு,

"அமையா நோக்கமும் இமையா நாட்டமும்,
ஏங்கிய முகமும் நீங்கிய இதழும்,
உயிரிலா நிலையும் உணர்விலா நடையும்
பார்த்திடிற் சூத்திரப் பாவையே"

(V. III : 185–88)

எனத் "தன்னை மறந்தாள்; தன் நாமம் கெட்டாள்"; அந்நிலையில் புருடோத்தமனைக் கண்டாள். இருவர் நாட்டமும் ஒன்றியது. அவள், அவனையே நினைந்த சிறப்பால் செவ்வன தெளிந்தாள்; தன் தந்தை சீவகனுரை,

"என்மனப் படியெது? எனக்கொரு மனதோ?"
எந்தையின் மனப்படி என்மனப் படியே"

(V. II : 95–96)

என மதித்தொழுகிய மாண்பையும் ஒரு பொருளாக மதியாது விலக்கினுள்; சுந்தரரொடு "அத்தனையும் அன்றே நீத்தாள்;" தன் நெஞ்சத்தில் உலகியலுக்கு – வழக்க வொழுக்க நெறி

களுக்கு – மணவினை முறைக்கு இடந்தாராது மறந்தாள்; நடையில் விரைவுமிகப் புருடோத்தமனுக்கு மாலையிட்டு மணம் புரிந்தாள்; "அகன்றுள் அகலிடத்தார் ஆசாரத்தை"; பி ரி வை விரும்பாது,

> "கண்மணி! அதற்குட் கண்வளர்ந் தனையோ!
> உன்னையும் மறந்துறங் குதியேல் இனிமேல்
> என்னையெங் கெண்ணுவை? இறும்பூ திருவரும்
> ஒருவரை ஒருவர் உணர்ந்தமை!
> [மனோன்மணி திடுக்கிட்டு விழிக்க]
> வெருவலை! மணியே! பிரியீர் இனியே"
> (V, III : 229–33)

எனச் சீவகனுர் தனியுவகை அடையப் புருடோத்தமனைச் சேர்ந்தாள்; ஒருமைப்பட்டாள்; "தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே".

## 9

நாவுக்கரசர் பாடிய காதல்திணைச் செவ்வியை நவில்தொறும் நயஞ்சுரக்கக் கற்றமுறைமையால் பேராசிரியர் சுந்தரனுர் வகுத்துப் போற்றி மெய்ப்பொருள் நாடகத்துள் திகழவைத்தது இந்நாளில் தமிழ்வளமாக ஓங்குகிறது. இவ்வண்ணம் படைத்த கூத்திலக்கியக் குறிக்கோள் எழுச்சிக்கு,

> "மெய்ப்பட நாடிச்
> சொல்லிய வல்ல பிறவவண் வரினுஞ்
> சொல்லிய வகையாற் சுருங்க நாடி
> மனத்தி னெண்ணி மாசறத் தெரிந்துகொண்
> டினத்திற் சேர்த்தி யுணர்த்தல் வேண்டும்
> நுனித்தகு புலவர் கூறிய நூலே."
> (பொருளதிகாரம் : மரபியல் : 110)

என்னுந் தொல்காப்பிய இலக்கணம் தெளிவித்த கருத்துச் செறிவு விருந்தாயிருத்தல் வேண்டும் என இங்குக் கண்ட திரு. சுந்தரனுர் நெஞ்சவோட்டம் நினைய்த்தூண்டுகின்றது.

---

உ

சிவ சிவ

# சாயாவனேசுவரர் மகா சிவராத்திரிக் கட்டளை

# நிதி ரூ. 1,500/-



'பூம்புகார் வணிகர் பொய்யில் செயல்' இயற்பகையார் உலகியற் பகையராகிச் 'சீரடியார்கள் யாரேனும் வேண்டும் யாவையும் இல்லை என்னாதே இக்கடற் படி நிகழ முன் கொடுக்கும் இயல்பில் நின்று' தொண்டு செய்த தலமாகத் திகழ்வதும், உபமந்நிய முனிவர் பூசித்த தலமாகியதும்,

காசிக்குச் சமானமாகச் சொல்லப்பெறும் ஆறு தலங்களுள் ஒன்று எனக் கருதப் பெறுவதும்,

''மலையார் தம் மகளொடுமா தேவன் சேரும்
மறைக்காடு வண்பொழில்சூழ் தலைச்சங் காடு
தலையாலங் காடுதடங் கடல்சூ ழந்தண்
சாய்க்காடு தள்ளுபுனல் கொள்ளிக் காடு
பலர்பாடும் பழையனூர் ஆலங் காடு
பனங்காடு பாவையர்கள் பாவம் நீங்க
விலையாடும் வளைதிளைக்கக் குடையும் பொய்கை
வெண்காடும் அடையவினை வேரு மன்றே'

என்று திருநாவுக்கரசு சுவாமிகள் அடைவு திருத்தாண்டகத்துள் 'எட்டாம் திருமூர்த்தியின் காடொன்பதுள்' ஒன்றாகக் குறிக்கப் பெற்ற தலமாவதும்,

திருஞானசம்பந்தர் இத்தலப் பண்ணில் ஒரு பதிகமும், சீகாமரப் பண்ணில் ஒரு பதிகமும், திருநாவுக்கரசர் திருநேரிசையில் ஒரு பதிகமும், திருத்தாண்டகம் ஒன்றும்பாடிப் போற்றியதும் ஆன திருச்சாய்க்காடு என்றும் சாயாவனத்தில்,

தில்லைநடமாடும் தேவர்போலும்,
வியன்துருத்தி வேள்விக் குடியார் போலும்,
அண்ணாமலை யுறையும் அண்ணல் போலும்,
அதியரைய மங்கை அமர்ந்தார் போலும்,
பராய்த்துறையுள் மேய பரமர்போலும்,
காவிரிப்பூம் பட்டினத் துள்ளார் போலும்,
உயர்தோணி புரத்துறையும் ஒருவர் போலும்,
மறைக்காட்டுக் கோடி மகிழ்ந்தார் போலும்,
ஒத்தூர் ஒரு நாளும் நீங்கார் போலும்,
முதுகுன்ற மூதூர் உடையார் போலும்,
காரோணத் தென்றும் இருப்பார் போலும்,
ஏகம்பம் மேவி யிருந்தார் போலும்,
பாண்டிக் கொடுமுடியும் தம்மூர் போலும்,
மாற்பேறு காப்பாய் மகிழ்ந்தார் போலும்,
சோற்றுத் துறைதுருத்தி யுள்ளார் போலும்,
நல்லமும் நல்லூரும் மேயார் போலும்,
நள்ளாறு நாளும் பிரியார் போலும்,
தில்லை நடமாடும் தேவர் போலும்,
– திருச்சாய்க்காட் டினிதுறையும் செல்வ னாரே"

என்று திருநாவுக்கரசர் பாடியவண்ணம் பல தலங்களிலும் அமர்ந்துறையும் சாயாவனேசுவரராகிய சிவலிங்கப் பெருமானுக்கு மகாசிவராத்திரி நாளில் நான்கு காலங்களில் முதற் காலத்தில் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நிகழ்த்துவித்தற் பொருட்டு இக்கட்டளை திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்றது. இது 'சாயாவனேசுவரர் மகா சிவராத்திரிக் கட்டளை நிதி' எனப்பெயர் பெறும்.

2. இதற்குரிய சேமவைப்பு ரு. 1500/- ரூபாம் ஓராயிரத்து ஐந்நூறு / இது ஆண்டொன்றுக்கு 3% வட்டி தரக்கூடிய அரசியல் கடன்தாள்களில் முதலீடு செய்யப்பெற்றுள்ளது.

3% கன்வர்ஷன் லோன் ஆப் 1946 சர்க்கார் கடன் பத்திரம் என். சிஏ. 246733- ரூ. 1000/- சிஏ. 242277 - ரூ. 500/- ஆக ரூ. 1500/- இது நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலனம் செய்யப் பெற்று வரும்.

3. இச்சேமவைப்பினின்று கிடைக்கும் வட்டித் தொகையினின்று காவிரிப்பூம்பட்டினத்துச் சாயாவனம் எனப்பெறும் திருச்சாய்க்காட்டில் சாயாவனேசுவரராகிய சிவலிங்கப் பெருமானுக்கு மகாசிவராத்திரி நாளில் முதல் யாமத்தில் மட்டும் நம்மால் தயாரிக்கப் பெறும் திட்ட ஜாப்தாவின்படி விசேஷ அபிஷேக ஆராதனை ஆண்டுதோறும் நடத்துவிக்கப் பெற்று வரும்.

4. இவ்வட்டி வருமானம் வேறு எம்முறையிலும் பயன் படுத்தப்பெற மாட்டாது.

5. இம் முதற் பொருள் அரசினரால் திருப்பியளிக்கப் பெறின் அதிக வட்டி தரக்கூடிய அரசியல் கடன்தாள்களில் முதலீடு செய்யப்பெற்று வரும். இம்முதற்பொருள் நம்பேரிலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்துவரும்.

Tirupanandal<br>Dated 9-3-1964. } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*



Registered at Tiruvadamarudhur Sub-Registrar's office on 11-3-1964 as No. 26, of 1964 of Book 4 volume 50, pages 276 to 278.

## கலைக்கோயிலில் வரப்பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 10403 & 4 | திருக்கச்சிநெறிக் காரைக்காடு திருப்பதிகம் | தருமையாதீனம் வெளியீடு |
| 10405 | திருஓணகாந்தன்தளி திருப்பதிகம் | ,, ,, |
| 10406 | மணக்குடித்தலச் சிறப்பு | ,, ,, |
| 10407 | திருவன்பார்த்தான் பனங்காட்டூர் திருப்பதிகம். | ,, ,, |
| 10408 | திருவல்லம் திருப்பதிகம் | ,, ,, |
| 10409 | திருக்கச்சி மேற்றளி திருப்பதிகங்கள் | ,, ,, |
| 10410 | சகலகலாவல்லி மாலை | ,, ,, |
| 10411 | திருவேற்காட்டுத் திரும்பதிகம் | ,, ,, |
| 10412 | திருவெண்பாக்கத் திருப்பதிகம் | ,, ,, |
| 10413 & 14 | திருக்கச்சி மேற்றளி திருப்பதிகங்கள் | ,, ,, |
| 10415 | திருக்கானப்பேர் திருப்பதிகங்கள் | ,, ,, |
| 10416 | திருவெண்பாக்கத் திருப்பதிகம் | ,, ,, |
| 10417 | திருக்கச்சி அநேகதங்காவதம் திருப்பதிகம் | ,, ,, |
| 10418 | திருமுறை மணிகள் | ,, ,, |
| 10419 | திருநீலகண்டத் திருப்பதிகம் | ,, ,, |

(தொடரும்)

# 'திருமுறை வெளியீடுகள்'

| | | | ரு நபை |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை (அச்சில்) | ... | |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | ... | 3 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும் புதிய பதிப்பு) | ... | 2 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, ,, | ... | 2 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் ,, | ... | 1 30 |
| 7* | திருவாசகம் ,, | ... | 0 56 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) | ... | 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலம்மட்டும்) | ... | 0 56 |
| 10* | திருமந்திரம் ,, (புதிய பதிப்பு) | ... | 2 25 |
| 11* | பதினோராந்திருமுறை ,, ,, | ... | 1 50 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் | ... | 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) | ... | 3 00 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு (அச்சில்) | ... | |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) | ... | 3 00 |
| 17 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) | ... | 1 75 |
| 18 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் ,, | ... | 2 75 |
| 19 | ,, யுத்த தேவகாண்டம் ,, | ... | 2 00 |
| 20 | ,, தக்ஷகாண்டம் ,, | ... | 1 50 |
| 21 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் | ... | 0 25 |
| 22 | கந்தரனுபூதி | ... | 0 13 |
| 23 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் | ... | 0 37 |
| 24 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் | ... | 0 10 |
| 25 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் | ... | 0 37 |
| 26 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 50 |
| 27 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 06 |
| 28 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 50 |
| 29 | திருக்குறள் – பொருட்பால் ,, | ... | 2 50 |
| 30 | திருக்குறள் – காமத்துப்பால் ,, | ... | 1 00 |
| | ஷை 28 29. 30 திருக்குறள் 3 புத்தகமும் | ... | 4 00 |
| 31 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... | 0 75 |
| 32 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 13 |

| | | |
|---|---|---|
| 33 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | 0 75 |
| 34 | திருவுசாத்தானக் கல்வெட்டுக்கள் | 0 37 |
| 35 | திருச்செந்தூர்க் [illegible]வெண்பா - மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனுட்சியம்மை இரட்டைமணி மாலை- மதுரை மீனுட்சியம்மை குறம் | 2 75 |
| 36 | திருவாரூர் நான்மணிமாலை - முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | 1 25 |
| 37 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை- தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | 1 00 |
| 38 | பண்டார மும்மணிக் கோவை - காசிக் கலம்பகம் - சகலகலாவல்லி மாலை | 1 00 |
| 39 | சிதம்பரச் செய்யுட்கோவை | 0 75 |
| 40 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | 0 50 |
| 41 | பெரியபுராணம் - உரைநடை | 2 00 |
| 42 | திருவிளையாடற் புராணம் - உரைநடை | 2 25 |
| 43 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | 0 50 |
| 44 | திருக்கயிலைத் திருமுறை | 0 37 |
| 45 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | 0 19 |
| 46 | செந்திலாண்டவன் மகிமை | 0 13 |
| 47 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | 1 37 |
| 48 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு | 2 75 |
| 49 | ஷை ஷை காமத்துப்பால் ஷை | 1 20 |
| 50 | அபிராமி அந்தாதி - தெளிவுரையுடன் | 0 50 |
| 51 | மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | 0 50 |
| 52 | கந்தரனுபூதி-தெளிவுரையுடன் | 0 35 |
| 53 | திருவாரூர்-திருப்பனுவல்கள் | 0 10 |
| 54 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி | 0 10 |
| 55 | பழமொழித்திருமுறை | 0 25 |
| 56 | திருவாரூர் நான்மணிமாலை | 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,
*"இலாசாஜ விலாசம்" 53, பிள்ளையார் கோவில்தெரு, திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.*

குறிப்பு:- • இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 47, 48, 49) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் - '64.